# திருச்சம்பரத்து அந்தாதி

## (வைணவ பக்தி நூல்)

ஆசிரியர்:

**சித்ரா கேசவன்,** எம். ஏ., பி. எட்.

**செல்வம் பதிப்பகம்**
9/63 லிங்கபுரம் (வாலமுட்டித் தெரு)
சித்தூர்-பாலக்காடு.
கேரளம்-678 101.

# திருவேங்கடவன்



இந்நூல்
திருமலை-திருப்பதி தேவஸ்தானத்தின்
பொருளுதவியினால் அச்சிடப் பெற்றது

Dr. N. V. P Unithiri,
Dept. of Sanskrit,
University of Calicut,
Kerala. Pin: 673 635

University Campus,
1st August, 1996.

I am happy to see that the Tamil devotional hymns in praise of Lord Vishnu of Trichambaram has come out in the form of a Book with the title 'Tiruchambarathu Anthaathi'.

Mrs Chitra Kesavan of Vaniankulam has taken much pains to write notes on these Vaishnavite religious hymns. I congratulate her for the same.

Dr C. Govindan has written an elaborate and history oriented Fore-ward to this religious book. In his research, he has come to the conclusion that the anonymous author of this treatise was the ruler of 'Poozhi Naadu' of the ancient times lying between Kozhikode and Kannur Districts. The author styled himself as 'Poozhiyar Kon' in his treatise which means 'the ruler of poozhi naadu'. Dr. Govindan also guesses that the author might have been a member of the royal family which ruled the Ezhi Mala Country. Ezhi Mala was mis-pronounced as Eli Mala and that was translated into sanskrit as 'Mooshika' from which the 'Mooshika Vamsa' takes its origin. The place where Trichambaram temple is situated was known by the name 'Marathoor' or 'Chemmarathoor' or simply 'Chemmaram' as stated by the Malayalam poet Ulloor, and the name Marathoor is found in the 80th stanza of the book. And the antiquity of Marathoor goes up to 5th or 6th century A. D wherein in the Sangam Literature of Tamilakam this place name is referred to as 'Marantai' (Akanaanooru. 376) adds Govindan. Though the presiding deity of the temple is called as Krishna by

the people now, in ancient times he was known as 'Tiruchambarathu Perumal'. It is interesting to note that the Annual Day Festival of this temple called 'Pookkoothu Nada Koothu' has got allegiance to the 'Kutak koothu (pot-dance) done by Lord Krishna in front of the palace of Banasura in order to get free Anirudha son of Pradhyumna from the imprisonment of Banasura. This Kutakkoothu is one of the twelve dances of ancient times.

Since Dr. Govindan assigns these devotional songs to the last quarter of the 13th century, we people of Kerala can be proud of being the donor of such an ancient Vaishnava Treatise in Tamil to the Tamil Literary World. And being the custodian of the original manuscripts, I am glad to see the treatise in print and hence, I wish all success to Mrs. Chitrakesavan, the commentator as well as to the Publisher.

Sd.
(Dr. N. V. P. Unithiri)

# என்னுரை

அண்மையில் என் தந்தையாரின் நண்பரும் கோழிக்கோட்டு பல்கலைக்கழகத்தில் சமஸ்கிருதத் துறையில் பணியாற்றி வருபவருமான பேராசிரியர் டாக்டர். என். வி. பத்மநாபன் உணித்திரி அவர்களிடமிருந்து ஒரு தமிழ்ச் செய்யுள் நூலைத் தந்து, அதற்கு ஒரு குறிப்புரை எழுதும்படி கேட்டுக்கொண்டார் தொண்ணூறு பாடல்களையுடைய அந்நூல் வைணவ நூலாக அமைந்துள்ளது திருமாலை (விஷ்ணுவை)ப் புகழ்ந்துபாடும் நூலாக அமைந்துள்ளது நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தை அருளிச் செய்த பன்னிரு ஆழ்வார்களின் பக்திப் பாசுரங்களை நன்கு படித்து இந்த பக்தி நூலை எழுதியதாகத் தெரிகிறது கி. பி 10, 11 நூற்றாண்டுகளில் வடமொழியில் (ஸம்ஸ்கிருதத்தில்) இயற்றப்பட்ட சதகச் செய்யுள் நூல் அடிப்படையில் இந்நூலை இயற்றியதாகத் தெரிகிறது

இந்நூலின் ஆசிரியர் கேரளத்தில் கண்ணனூர் மாவட்டத்தை ஆண்டு வந்த மூஷிகவம்சம் எனும் அரச பரம்பரையைச் சார்ந்தவராகத் தெரிகிறது அவர்கள் காலத்தில், 9 அல்லது 10-ஆம் நூற்றாண்டில் கண்ணனூர் மாவட்டம் தளிப்பறம்பு எனும் இடத்தில் கட்டப்பட்டுள்ள விஷ்ணு கோவிலில் எழுந்தருளியிருக்கும் 'பெருமாளை' (ஸ்ரீ கிருஷ்ணன்)ப் புகழ்ந்து பாடும் நூலாக இது அமைந்துள்ளது ஆசிரியர் தன்னை 'புழியர் கோன்' எனகிறார் அதனால் இவர் மூஷிக அரச வம்சத்தை சேர்ந்தவர் என்பது தெரிகிறது. ஆனால் அவரது உண்மைப் பெயரை நூலில் கூறவில்லை. இந்த நூலின் கையெழுத்துப் பிரதியை தந்துதவிய டாக்டர் பத்மநாபன் உணித்திரியும் அதே மூஷிக வம்சத்துப் பரம்பரையில் க்ஷத்திரிய இனத்தில் வந்தவர். ஆனால் நூல் மலையாள எழுத்துக்களில் தான் எழுதப்பட்டுள்ளது. நான் அதைத் தமிழ் எழுத்துக்களில் பெயர்த்து எழுதியுள்ளேன்

இந்நூல் சதகச் செய்யுள் நூற்களை ஒத்திருக்கிறது. வைராக்கிய சதகம், மூக்தோபதேச சதகம். போன்ற நூல்களை ஒத்துள்ளது. ஆனாலும் விஷ்ணுவின் பத்து அவதாரங்களில் மச்சாவதாரத்தையும், வாமனாவதாரத் தையும் தவிர்த்த மற்ற எட்டு அவதாரச் செய்திகளும் இந்நூலில் கூறப்பட்டுள்ளன நூல் முழுதும் பக்திச் சுவையே பரநதுள்ளது. எல்லாம் வல்ல எம்பெருமானின் சரணாரவிந்தங்களே இப்பிறவித் துன்பத்திற்குரிய அரு மருந்து என்ற முறையில் இநநூல திருமாலின் வைபவத் தை கூறிச் செல்கிறது

இந்நூலுக்கு குறிப்பெழுதும் வாய்ப்பினைத் தந்த டாக்டர் என் வி.பி.உணித்திரி அவர்களுக்கும் ஆராய்ச்சி உரையினை எழுதித் தந்த டாகடர். செ. கோவிந்தன் அவர்களுக்கும் என் நன்றி என்றும் உரியது

இந்நூலினை என் பெரிய தாதா நாராயண வேல் முருகன் அவர்களுக்குக் காணிக்கையாககுகிறேன்.

வாணியமகுளம், கேரளா
Pin: 679522
3-4-1996.

**சந்த்ரா கேசவன்.**

# ஆராய்ச்சி முன்னுரை

தமிழிலக்கியக் கருவூலத்துக்குச் சேரநாடு தந்த நன்கொடை சிறிதன்று. சங்கப் பாடல்களை யாத்த புலவர்களில் பாதிக்குப் பேர்பட்டவர்கள் சேரநாட்டைச் சேர்ந்தவர்கள். திவ்வியப் பிரபந்தத்திலும் பன்னிரு திருமுறைகளிலும் சேரமன்னர் யாத்த பாடல்கள் நிரம்ப உள்ளன. ஐம்பெரும் காப்பியங்களில் தலை சிறந்து விளங்கும் சிலப்பதிகாரத்தை இயற்றித்தந்தவர் சேரநாட்டு இளங்கோ வடிகளே. தமிழ்மொழியில் எக்காலத்தும் சிறந்து விளங்கும் நாடக நூலான மனோன்மணீயத்தை நமக்குத் தந்தவர் சேரநாட்டுத் திருவிதாங்கூரில் வாழ்ந்தவரான பேராசிரியர் பெ. சுந்தரம் பிள்ளையவர்கள். இவர்கள் வரிசையில் ஏறக்குறைய எழுநூறு அல்லது எண்ணூறு ஆண்டுகட்கு முன் இயற்றப்பட்ட தமிழ் நூலொன்று சேரநாட்டுக் கண்ணனூர் மாவட்டத்திலிருந்தும் இப்பொழுது நமக்குக் கிடைத்துள்ளது. திருமாலைப் பற்றி இயற்றப்பட்டுள்ள இந்நூல் சதகச் செய்யுள் வகையைச் சார்ந்தது. அந்தாதித் தொடையிலமைந்தது. இந்நூலைத் தமிழுலகுக்குக் கிடைக்கப்பண்ணச் செய்தவர் கோழிக்கோட்டுப் பல்கலைக்கழகச் சமஸ்கிருதத் துறையைச் சேர்ந்த டாக்டர் என். வி. பத்மநாபன் உண்ணித்திரி என்பவர். இந்நூலுக்குக் குறிப்புரையொன்றினை எழுதியிருக்கின்றார் திருமதி சீதா கேசவன் அவர்கள். இவர் பாலக்காட்டுப் பி. எம். ஜி. உயர் நிலைப் பள்ளியில் ஆசிரியையாகப் பணியாற்றுகின்றார்.

இவர் உரையெழுதிய 'திருச்சயபுரத் தந்தாதி' எனும் இந்நூலைப் படித்தேன். நூல் முழுமையும் காஞ்சித் திணையே பேசப்படுகின்றது. ஆசிரியர் வாழ்க்கை நிலையாமையினை எடுத்துக் கூறித் திருமாலின் இணையடிகளே பாவிட்டப் பிறவிக்குச் சரணம் என்று கூறும் முறை இந்நூற் பாசுரங்கள் கூறிச்செல்கின்றன. திருமால் தசாவதாரங்களில் மச்சாவதாரம், பலராமாவதாரம் இரண்டும் நீங்கலாக மற்ற எட்டு அவதார மகிமை

இந்நூலுள் கூறப்படுகின்றது. என்றாலும் திருச்சம் பரத்துக் கோயில் திருவிழாவில் பலராமனும் இடம்பெறு வது நூலில் பலராமன் பற்றிய பாசுரங்கள் அழிந்து போயின என்று நினைக்க தூண்டுகின்றது.

இந்நூலில் உள்ள மொத்த பாசுரங்களில் இன்று நமக்கு தொண்ணூறு பாசுரங்களே கிடைத்துள்ளன. அவற்றுள்ளும் ஒரு சில முழுமையாக இல்லை. சொற் களும் சீர்களும் சிதைந்தே காணப்படுகின்றன. இப்பாசு ரங்கள் எண்சீர்கழி நெடிலடி ஆசிரிய விருத்தப் பாவில் அந்தாதித் தொடையில் அமைந்துள்ளன. இக்காரணம் பற்றியே உரையாசிரியர் இந்நூலுக்கு 'திருச்சம்பரத்து அந்தாதி' என்று பெயர் சூட்டினர் போலும், நூற்றிற் கும் மேற்பட்ட பாடல்களையும நூற்றிற்கும் குறைந்த பாடல்களையும் உடைய நூற்கள் பொதுவாக நூற்றந் தாதி அலலது சதகம் என்னும் பெயர்களால் அழைக்கப் படுவதுண்டு, இம்முறையில் இந்நூல் 'திருச்சம்பரத்து அந்தாதி' என்று பெயர் பெறுவது பொருத்தமே.

உரையாசிரியர் பாசுரங்களின் முக்கியமான சொற் களுக்கே உரையெழுதிச் செல்கின்றார். பாசுரங்கள் மிக எளிமையான நடையில் அமைந்திருப்பதனால் அவ் வாறு செய்திருக்கலாம். விரிவானதொரு பொழிப்புரை இந்நூற் செய்யுட்களுக்குத் தேவையில்லை என்பதும் உண்மையாகும். என்றாலும் இன்னும் சில முக்கியமான சொற்களுக்கும் தொடர்களுக்கும் விளக்கம் தந்திருந் தால் சிறப்பாக இருந்திருக்கும்.

அந்தாதித் தொடையிலமைந்த இப்பக்திப்பனுவலை யாத்த ஆசிரியர் பெயர், அவர் வாழ்ந்த காலம் பற்றிய குறிப்புக்கள் இந்நூலுள் காணப்படவில்லை என்ற உரை யாசிரியர் கூற்று உண்மையே, எனினும் பாசுரங்களில் வரும் ஒரு சில சொற்கள், தொடர்கள் இவற்றின் அடிப் படையில் இதனை இயற்றித்தந்த ஆசிரியர் பற்றியும் அவர் வாழ்ந்த காலம் பற்றியும் ஓரளவு ஊகித்தறிந்து கொள்ளவியலும்.

இந்நூற் பாசுரங்களில் பயன்படுத்தப்பட்டுள்ள வேலம், விடன், வீடன் ஆகிய சொற்கள் இந்நூலெழுந்த காலத்தை மறைமுகமாக சுட்டி நிற்கின்றன. கடலைக் குறிக்கும் 'வேலம்' எனும் வடசொல் தமிழில் 'வேலை' யாகும். கரிகாற் சோழனைப் பற்றி எழுந்த, தெலுங்குச் சோழனுன புண்ணிய குமாரனின் (கி. பி. 7-ம் நூற் ருண்டு) மேலேப்பாடு-மேல்பாடி-, செப்பேட்டில் இச் சொல் வருகின்றது. வீரன் என்று பொருள்படும் 'வருஷ' எனும் வடசொல் தமிழில் 'விடன்' என்றே பயிலப்படும். 'விடன்' எனும் சொல் தமிழிலக்கியத்தில், கி. பி. ஏழு அல்லது எட்டாம் நூற்ருண்டில் இயற்றப்பட்ட 'பெருங் கதை' என்ற நூலிலும் பின்னர் மணிமேகலையிலும் (கி. பி. பதிஞேராம் நூற்ருண்டு) அதன் பின்னர் கி. பி. பனிரண்டாம் நூற்ருண்டில் செயங்கொண்டாரால் முதற் குலோத்துங்க சோழன் மேல் பாடப்பட்டுள்ள 'கலிங்கத்துப் பரணி' எனும் நூலிலும் (12-வது போர் பாடியது-தாழிசை 43) தான் காணப்படுகின்றது. சிலப் பதிகாரத்தில் இச்சொல் பயிலப்படவில்லையென்ருலும், அந்நூலில் வரும் வறுமொழியாளன் (காதை 10, அடி 219) எனும் சொல்லுக்கு கி. பி. 14-ம் நூற்ருண்டில் வாழ்ந்த அடியார்க்கு நல்லார் உரையெழுதும் போது, 'பயனில சொல்லாளன்', 'விடன்' என்றபடி 'என்று குறிக் கின்ருர். இதினின்றும் அடியார்க்கு நல்லார் வாழ்ந்த கி. பி. பதிஞன்காம் நூற்ருண்டில் விடன் எனும் சொல் லுக்கும் 'பயனில சொல்லாளன்' எனும் இழிபொருளே இருந்தது என உணரலாம். இக்காலத்தில் கேரளத்தில் எழுந்த மணிப்பிரவாள நடையிலமைந்தத் தூது நூற் களில் விடன் எனும் இச்சொல் 'காமுகன்' எனும் இழி பொருளிலேயே பயன் படுத்தப்பட்டிருப்பதைக் காண லாம். மேற்காட்டியவற்றினின்றும் திருச்சம்பரத் தந் தாதி எனும் இப்பக்திப் பனுவல் சிலப்பதிகார-மணிமே கலைக் காப்பியங்களுக்குப் பின்னும் அடியார்க்கு நல்ல காலத்துக்கு முன்னும் உள்ள காலப் பகுதியில் இயற் பட்டிருத்தல் வேண்டும் என்பதனை உணரலாம்.

இனி, கி. பி. பதினோராம் நூற்றாண்டில் புத்தமித்திரனார் எனும் புலவரால் வீரசோழியம் எனும் பெயரில் இயற்றப்பட்ட இலக்கண நூலில் வரும் ஒரு விதிக்கு-நிலை மொழியில் 'ழ' கரம் நின்று வருமொழியில் 'த' கரம் வந்தால் புணர்ச்சியில் அது 'ட' கரமாகத்திரியும்-எனும் இலக்கண விதிக்கு இவ்வந்தாதி நூலில் ஓர் உதாரணம் உள்ளது. இந்நூல் 70-வது பாசுரத்தில் வரும் 'புகட்டேன்' எனும் சொல்லே அது. புகழ்+தேன் எனும் இரு சொற்களும் புணர்ச்சியில் புகட்டேன் என்று இந் நூலில் வந்திருப்பது அறியத்தக்கதாகும். இவ்விதிக்கு தமிழிலக்கியத்தில் காணப்படுகின்ற உதாரணம் கச்சியப்ப சிவாச்சாரியாரால் இயற்றப்பட்ட கந்தபுராணத்தில் வரும் 'திகடசக்கரன்' (திகழ்+தசக்கரன்) எனும் சொல்லாகும். கந்தபுராணம் பிற்காலத்திய நூல் என்பது தெளிவு. இதனால் இவ்வந்தாதி நூலாசிரியர் புத்தமித்திரனாருக்கும் பின்னால் வாழ்ந்தவராகலாம். பண்டைச் சேரநாட்டில் வழங்கி வந்த தமிழ் சிதைந்து வடமொழியுடன் உறழ்ந்து மலையாண்மையெனும் மலையாள மொழி உருவானபோது அம்மொழியிலெழுந்த ஆதி நூற்கள் தமிழும் வடமொழியும் கலந்த 'மணிப்பிரவாளம்' எனும் மொழிநடையில் அமைந்தன. அத்தகைய நூல்களில் கி. பி. 1225 ஐ ஒட்டி எழுந்த 'உண்ணியச்சி சரித' மும் ஒன்று. அந்நூலில் 'விடன்' எனும் சொல் 'காமுகன்' எனும் இழிபொருளிலேயே பயன் படுத்தப் பட்டுள்ளது. எனவே இவ்வந்தாதி நூல் கி. பி. 1070க்குப் பின்னரும் கி. பி. 1225க்கு முன்னரும் உள்ள காலத்தில் இயற்றப்பட்டிருக்கலாம்.

இப்பக்தி நூலை இயற்றிய ஆசிரியர் பெயர் நூலில் எங்கும் காணப்படவில்லை. ஆனால் இந்நூற்ப் பாசுரம் 90ல் 'பூழியர் கோன் தன்வாய்' என்று ஒரு தொடர் வருவது கொண்டு நூலாசிரியர் பூழியர் கோன்-பூழிநாட்டுக்கு அரசன் எனக்கொள்வதில் தவறில்லை. கோழிக் கோடு மாவட்டத்திற்கு வடக்கேயும் கண்ணனூர் மாவட்டத்திற்குத் தெற்கே அமைந்த பகுதி பூழிநாடு. சங்க

காலத்திலும் பிற்காலத்திலும் இப்பூழிநாடு இருந்தது. பூழிநாட்டைப் பிற்காலத்தில் ஆண்ட அரச மரபு மூஷிக வம்சம் எனப்பட்டது. நன்னன் பரம்பரையே இப்புதிய அரசு மரபாகும். முதலாம் இராஜராஜ சோழன் காலத்தில் இராமந்தளியைக் கோ நகரமாகக் கொண்டு பூழி நாட்டை ஆண்டவன் கண்டன் காரி வர்மன். 'இராமன் தளி' ராஜ ராஜன் கல்வெட்டில் 'இராம குடம்' என வரும். இராஜ ராஜனின் பெயரனை முதலாம் இராஜாதிராஜன் இம்மூஷிக அரசரின் மீது ஆதிக்கம் கொண்ட காரணத்தால் தளிப்பறம்பு எனும் இராமந்தளியில் எழுந்தருளியுள்ள சிவன் இராஜாதிராஜன் எனும் சிறப்புப் பெயரால் அழைக்கப்படுகின்றார்.

தளிப்பறம்பு எனும் ஊரின் ஒரு பகுதியில் தான் திருமாலுக்கு கோயில் உள்ளது. இப்பகுதி பண்டைக் காலத்தில் மரத்தூர் என்றும் பின்னால் செம்மரத்தூர் எனவும் வழங்கியது. செம்மரத்தூரை வடமொழி வாணர் முதலில் செம்பர புரமாகவும் பின்னர் திருச்சம்பர புரமெனவும் கூறினர். செம்மரமெனும் சம்பரம் சம்பர முனியோடு இணைத்து கூறப்பட்டது. அவ்வாறு இங்கு எழுந்தருளியிருக்கும் 'பெருமாள்' (திருமால்) இன்று 'திருச்சம்பரத்துக் கிருஷ்ணன்' என அழைக்கப் படுகின்றார். இங்கு பெருமாள் 'சதுர் பாகு' வாக (நான்கு கைகள்) காட்சி தருகிறார். குருவையூர் எனும் குருவாயூரிலும் திருமால் நான்கு கைகளுடன் காட்சி தருவதால் அங்குள்ளோர் குருவாயூரப்பனைக் 'கிருஷ்ணன்' என்றே அழைப்பது போல தளிப்பறம்பு ஊராரும் திருச்சம்பரத்து அப்பனைக் 'கிருஷ்ணன்' என்றே அழைக்கின்றனர். திருச்சம்மரத்தூரின் பண்டைப் பெயரான மரத்தூர் என்ற பெயரைத்தான் கி. பி. முதல் நூற்றாண்டில் வாழ்ந்த பிளினி, தாலமி போன்றோர் 'மரந்தை' என்று கூறினர் போலும்! சங்கப்பாடலிலும் மரந்தை உண்டு

கி. பி. 1150 ஐ ஒட்டி வாழ்ந்த ஜல ஹாணர் என வடமொழி ஆசிரியர் தேவதாசியரின் வலையில் வீழ்

சீரழியும் மக்களை அவர்கள் பிடியினின்றும் விடுபடச் செய்ய அவர்களுக்குச் செய்யும் உபதேசமாக 'முக்தோபதேச'மெனும் நூலை இயற்றினர். இவரே பின்னர் 'சாந்தி சதகம்', 'சோமபால விலாசம்' எனும் நூற்களையும் யாத்தார். கி. பி. 1150-1200 இடையே 'அன்னியாபதேச சதகம்', 'சாந்தி விலாச சதகம்' ஆகிய நூற்கள் வடமொழியில் எழுந்தன. வடமொழியிலமைந்த இச் சதக நூற்களை பின் பற்றியே தமிழிலும் சதக நூற்கள் எழுந்தன என்பதால் திருச்சம்பரத் தந்தாதி எனும் இச் சதக நூலை இயற்றிய 'பூழியர் கோ' னும் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் அல்லது பதின்மூன்றும் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்தவராகலாம்.

மூஷிக வம்சத்து அரசரான இரண்டாம் வலபன் (1070-1122) காலத்தில் தான் இத்திருச் சம்பரதத்துத் திருமால் கோயில் புதுப்பிக்கப்பட்டது என்று தெரிவதால் இவனுக்கும் பின்னால் வந்த அரசர்களில் யாரோ ஒருவர் தாம் இச்சதகச் செய்யுளை இயற்றியிருக்க வேண்டும். மகோதய புரத்துச் சேரவரசரான குலசேகரப் பெருமாள் (ஆழ்வார்) அருளிய பெருமாள் திருமொழியில் கண்ணபுரம் எனும் திருமால் திருப்பதி குறிக்கப்படுகின்றது. இத்திருப்பதி தமிழகத்தில் உள்ளதா அல்லது சேர நாட்டில் இருப்பதா என்ற ஐயம் இன்னும் தீர்க்கப்படவில்லை. இருப்பினும் கண்ணபுரம் எனும் ஊரில் திருமாலுக்கு ஒரு கோயில் உள்ளது என்பது உண்மையாகும். இவ்வூர் திருச்சம்பரம் கோயிலினின்றும் ஒரு சில கி. மீ. தூரத்தில் உள்ளது என்பது இக்கோயிலின் முக்கியத்துவத்தை எடுத்துக் கூறுகின்றது.

நாலாயிர திவ்வியப் பிரபந்தத்திலும், சிலப்பதிகாரத்திலும் விதந்து கூறப்படும் திருமால் (கண்ணன்) ஆடிய 'குடமாடல்' எனும் 'குடக்கூத்து' திருச்சம்பரத்துக் கோயில் திருவிழாவின் போது ஆடப்படுகின்றது என்பது நமக்கெல்லாம் வியப்பினைத்தருகின்றது. இத்திருவிழா கும்ப மாதத்தில் (மாசி) நடைபெறுகிறது. கும்பம் குடம் ஆகும். எனவே குடமாடல் கும்ப மாதத்தில்

நடைபெறுவது பொருத்தமே "வாணன் பேரூர் மறு கிடைநடந்து, நீணிலம் அளந்தோன் ஆடிய குடமும்" என்று சிலப்பதிகாரத்துள்ளும் வருகின்றது. இக்குடமா டல் அல்லது குடக்கூத்து, வாணன் சிறை வைத்த அனி ருத்தனை மீட்க நீணில மளந்தோனை திருமால் (பிரித் யும்னன்) வாணன் பேரூரான "சோ" நகரில் ஆடிய கூத் தாகும். ஒன்றுக்கு மேற்பட்ட குடங்களிருந்தன என் பதை பெரியாழ்வார் திருமொழியில் வரும் "குடங்களெ டுத்தேற விட்டுக் கூத்தாட வல்ல வெங்கோவே!" எனும் அடியே சான்று பகரும். திருச்சம்மரத்துக் கோயில் திரு விழாவில் இரண்டு பூசாரிகள் இரண்டு குடங்களைத் தலை மேல் சுமந்து ஊர் வலம் வருகிறார்கள்; ஆடுகிறார்கள். இதனை அவ்வூரார் "பூக்கோத்து நடைக்கூத்து" அல்லது பெருவழியில் நிருத்தம் என்கிறார்கள். சிலம்பில் இளங் கோவடிகள் கூறும் "மறுகு" 'தெரு' அல்லது 'வீதி' என் னும் பொருளது. இவ்வந்தாதியிலும் "மறுகு" எனும் சொல் 'வீதி' எனும் பொருளிலேயே ஆளப்பட்டுள்ளது. ஊரார் கூறும் நடைக்கூத்தும் தெருக்கூத்தேயாகும். இவையாவும திவ்வியப்பிரபந்தம், சிலப்பதிகார மணி மேகலை காப்பியங்கள் ஆகியவை இயற்றப்பட்ட காலத் திற்கும் பிற்பட்டு இந்நூல் இயற்றப்பட்டிருக்கிறது என் பதனையே காட்டுகின்றன. திவ்வியப்பிரபந்தத்தில் குறிக்கப்படும் குடக்கூத்து கோட்டயம் மாவட்டம் கவி யூர்க் கோயிலிலும் பாலக்காடு மாவட்டம் திருநாவாய் நாவாமுகுந்தன் கோயிலிலும் சிற்பங்களாகச் செதுக்கப் பட்டுள்ளன. "நவநீத முகுந்தன்" என்ற தொடர் தான் இன்று "நாவாமுகுந்தன்" என்று சிதைந்து வழங்குகிறது.

இத்தகு சிறப்பு வாய்ந்த திருச்செம்மரத்தூரில் (திருச் சம்பரம்) எழுந்தருளியிருக்கும் பெருமாள் (விஷ்ணு) மீது பாடப்பட்டிருக்கும் இச்சதகச் செய்யுள் நூலுக்கு உரிய வர், கோழிக்கோட்டுப் பல்கலைக்கழக சமஸ்கிருத பேராசிரியர் டாக்டர். என். வி. பத்மநாபன் உணித்திரி ஆவார். உணித்திரி என்பது அவரது இனத்தைக் குறிக் கும் சொல். கி. பி. 10, 11 நூற்றாண்டுகளில் மகோத

புரிந்து இளவரசர்களின் கோயிலதிகாரிகளாக நியமிக்கப் பட்டனர். இவர்களுக்குக் கீழே கோயில்களின் பூசை முதலியவற்றைக் கண் காணிப்பாளராக செயல் பட்ட வர்கள் உள்நாழிகை அதிகாரிகள் எனப்பட்டனர். இவர் களும் சத்திரிய இனத்தைச் சேர்ந்தவர்களே. உள் நாழி கை அதிகாரி உண்ணாழிகையதிகாரி என்றாகும். அச் சொல் காலப்போக்கில் 'உணித்திரி' என்றாயிற்று. உண் ணி (குழந்தை)யதிகாரி என்று கொண்டாலும் பொருந் துவதாகும்.

இந்நூல் கண்ணனூர் மாவட்டத்தில் கல்லம்பள்ளி மனை எனும் இல்லத்திலிருந்து கிடைத்தது. கி. பி. பதின்மூன்றும் நூற்றாண்டைச் சேர்ந்தது என்று தெரிவ தால் வடமலபார்ப் பகுதியில் அக்காலம் வரையிலுமா வது அப்பகுதியில் தமிழே வழக்கில் இருந்தது என்று கொள்ளலாம். சிலப்பதிகாரத்தில் வரும் 'நாத்தூன்', 'வக்காணம்' நாச்சியார் திருமொழியில் வரும் 'மைத் துனன்' ஆகிய உறவு முறைப் பெயர்கள் இன்றும் இப் பகுதியில் வழக்கில் உள்ளன.

இத்தகு நூலுக்கு ஒரு குறிப்புரை எழுதியிருக்கின்றார் திருமதி. சித்ரா கேசவன் அவர்கள். அவர் உரை அரும் பதவுரையாகத் திகழ்கின்றது. அவருக்கு என் பாராட்டு தல்கள்.

இவ்வரிய பக்திப் பனுவலைத் தமிழுலகுக்குத் தந்த டாக்டர். என். வி. பி. உணித்திரியவர்களுக்குத் தமிழ் கூறும் நல்லுலகம் நன்றிக் கடன் பட்டிருக்கின்றது.

டாக்டர். செ. கோவிந்தன்
முதன்மை ஆய்வாளர்
தமிழாராய்ச்சி மையம் அரசு கல்லூரி
சித்தூர், கேரளம்.

அரசுகல்லூரி
9-9-1996.

# பன்னிரு ஆழ்வார் பாசுரங்கள்

1. பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத் தாண்டு
 பலகோடி நூறாயிரம்
 மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா உன்
 சேவடி செவ்வி திருக்காப்பு.

(முதலாயிரத்தில் பெரியாழ்வார் அருளிச்
செய்த திருப்பல்லாண்டு-1)

2. மார்கழித்திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
 நீராடப்போதுவீர் போதுமினோ நேரிழையீர்
 சீர்மல்குமாய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்
 கூர்வேல்கொடுந் தொழிலன் நந்தகோபன் குமரன்
 ஏரார்ந்த கண்ணி யசோதை யிளஞ்சிங்கம்
 கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல் முகத்தான்
 நாராயணனே நமக்கே பறைதருவான்
 பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய்

(ஆண்டாள் திருப்பாவை-1)

3. இருளிரியச் சுடர் மணிகளிமைக்கும் நெற்றி
 இனத்துத்தியணி பணமாயிரங்களார்ந்த
 அரவரசப்பெருஞ்சோதி யனந்தனென்னும்
 அணிவிளங்கு முயர் வெள்ளையணையை மேவி
 திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி
 திருக்கையாலடி வருடப் பள்ளி கொள்ளும்
 கருமணியைக் கோமளத்தைக் கண்டு கொண்டு
 என் கண்ணிணைகளென்று கொலோ களிக்கு நாளே

(குலசேகரப் பெருமாளருளிச் செய்த
பெருமாள் திருமொழி-1)

4. வடங்கலந்த வண்கரி மருப்பொசித்தோர்.
பொய்கைவாய்
விடங்கலந்த பாம்பின் மேல் நடம்பயின்ற நாதனே
குடங்கலந்த கூத்தனாய் கொண்டல் வண்ண தண்
துழாய்
வடங்கலந்த மாலைமார்ப காலநேமி காலனே

(திருமழிசைப்பிரான்-திருச்சந்த விருத்தம்-38)

5. பச்சைமாமலைபோல் மேனிப் பவளவாய்க் கமலச்
செங்கண்
அச்சுதாவமரரேறே ஆயர்தங் கொழுந்தே
யென்னும்
இச்சுவை தவிரயான்போய் இந்திரலோக மாளும்
அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா
நகருளானே!

(தொண்டரடிப் பொடியாழ்வார்-திருமாலை-2)

6. கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெ
யுண்டவாயன் என்னுள்ளம் கவர்ந்தானை
அண்டர் கோன அணியரங்கன் என்னமுதினைக்
கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவே!

(திருப்பாணாழ்வார்-அமலனாதி பிரான்-10)

7. கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ட
பண்ணியப் பெண்மாயன் என்னப்பனில்
நண்ணித் தென்குருகூர் நம்பியென்றக்கால்
அண்ணிக்கு மமுதூறும் என்னாவுக்கே

(மதுரகவியாழ்வார்-கண்ணிநுண் சிறுத்
தாம்பு-1)

8. வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்
பெருந்துயர் இடும்பையில் பிறந்து
கூடினேன் கூடியிளையவர் தம்மோடு
அவர் தரும் கலவியே கருதி
ஓடினே னோடியுய்வதோர் பொருளால்
உணர்வெனும் பெரும்பதம் திரிந்து
நாடினேன் நாடி நான்கண்டு கொண்டேன்
நாராயணா வென்னும் நாமம்

(திருமங்கையாழ்வார்-பெரியதிருமொழி
முதற்பத்து-முதற்திருமொ.ழி-1)

9. வாயவனையல்லது வாழ்த்தாது கையுலகம்
தாயவனையல்லது தாந்தொழா-பேய்முலைநஞ்
சூணாகவுண்டான் உருவொடு பேரல்லால்
காணாகண் கேளா செவி

(பொய்கையாழ்வார்-முதல் திருவந்தாதி-11)

10. கொண்டுவளர்த்தக் குழவியாய்த் தான் வளர்ந்தது
உண்டதுலகேழு முள்ளொடுங்க-கொண்டு
குடமாடிக் கோவலனாய் மேவி என் னெஞ்சம்
இடமாகக் கொண்ட இறை

(பூதத்தாழ்வார் இயற்பா-இரண்டாந்திருவந்தாதி-98)

11. திருக்கண்டேன் பொன்மேனிகண்டேன் திகழும்
அருக்கனணி நிறமும் கண்டேன்-செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன் புரிசங் கங்கை கண்டேன்
என்னாழி வண்ணன்பாலின்று

(பேயாழ்வார்-மூன்றாந்திருவந்தாதி-1)

12. கோவிந்தன் குடக்கூத்தன் கோவலனென்றே குனிந்து
தேவுந்தன்னையும் பாடியாடத் திருத்தி என்னைக்
கொண்டென்
பாவந்தன்னையும் பாறக்கைத்து எமரேழேழு
பிறப்பும்
மேவுந்தன்மையமாக்கினான் வல்லனெம்பிரான்
விட்டுவே!

(நம்மாழ்வார்-திருவாய்மொழி-இரண்டாம்பத்து
ஏழாம் திருவாய்மொழி-4)



## திருச்சம்பரத்துப் பெருமாள்



நீளாத்துங்க ஸ்தநகிரி தடீஸுப்த முத்போத்ய க்ருஷ்ணம்
பாரார்த்யம் ஸ்வம் ச்ருதி சத சிரஸ்ஸித்த மத்யா பயந்தீ
ஸ்வோச்சிஷ்டாயாம் ஸ்ரஜி நிகளிதம் யாஃபலாத் க்ருத்ய புங்க்தே
கோதா தஸ்யை நம இதமிதம் பூய ஏவாஸ்து பூய:

# திருச்சம்பரந்தாதி

1. அளவொழிந்த யுடற்பிறவி யபார வேலம்
பரிவொன்றி னமையாத மலர்ந்த மூப்பாம்
தளவொழிந்த பொதியமரும் இருவினைப் பெருவரி
யாளும்
வன்சுறவா லெற்றுண்டு மறுகுந் நெஞ்சே
களவொழிந்து புலனடக்கி பிறிதொன் றிட்டென்
கண்ணாவென் கண்ணாவென் றிரங்கிக்
கொண்டால்
கொளவொழிந்தென் னகனிறைந்த கோல நேமி
கொழுஞ்சுடர்த்தன் றிருவடியைக் கூடி டாயே!

நேமி-சக்கரம், வேலம்-கடல், அபாரம்-பெரிய,
வேலப் பெண்-இலக்குமி.
இருவினைப் பெருவரி-நல்வினை, தீவினையாகிய கடல்.

2. கூடுபொருள் படைத்தார்கள் மன்னர் கற்றார்
குலமுடையார் வலியார்கள் கொடுமை செய்தே
ஓடு தொழி லுடையார் என்றிவர்க ளெல்லாம்
உதிர்கின்றவா றுலகியற்கை யுணர்ந்து நெஞ்சே
ஆடுபடவா ளரவின் தலைப் பக்கத்தில்
ஆயிரம் தோளுடன்பரப்பி யடியேன் உய்ய
நீடு பொருமா மரகத மேனிச் செங்கண்தன்

னெடியவன்றன் புகழகத்தே நின்றி டாயே!
நெடியவன்=திருமால் உதிர்வது=இறப்பது.

3. நின்றமயிர்த் தோலுதிர மிறைச்சி யென்பு
நிறை நரம்பு புழுமுளை மலமென் றின்ன
வென்றியொரு நன் பொருளிவ் வுடலின் நன்மை
அறிந்ததன் மேலாதரத்தை யறுத்து நெஞ்சே
துன்றுசதை யுறுமுதலை முறியக் கத்துஞ்
சொரிமதுவா ரணமுய்யப் பொய்கை சூழ
சென்றமரும் பெருங்கருணைச் செங்கண் செவ்வாய்ச்
சிறுநுதலென் பெருமுதற்கீழ்ச் சேர்த்திடாயே!

ஆதாரம்=ஆசை, பற்று, மதம்=மதநீர், பெருமுதல்=தலை.

4. சேர்ந்த மரத் துறுமொட்டாய் அலராயக் கன்றுஞ்
சிறுகாயாய்ப் பெருங்காயாய்ப் புதராய்ச் செவ்வி
யார்ந்த பழமாய் அழுகி விழுமாப் போல
அவிகிற வாறுலகியற்கை யுணர்ந்து நெஞ்சே
தீர்ந்து பிறிதற விட்டுன்னகமே சென்று
செழுங்கமல மலர்நடுவே செல்லச் செல்ல
ஓர்ந்ததின். னுள்ளிலெழும் பரமானந்த வெள்ளத்
துரைகடந்த பெரு வெளியோ டொருங்கி
டாயே;

அலர் = மலர். புதர் = கொத்து. பெருவெளி = சிதாகாசம்.

5. ஒருங்கிடவே வதற்கு முன்னே யுள்ளேன்
ஒரு கடலைக் கடவதற்கு முன்னவேறு
ஒருங்கிடுவேன் வேரறக் கிளர்வதற்கு முன்னே
ஓராது உண்மையோடு உடற்றும் நெஞ்சே
பெருங்கருணைக் கடலே யென்ன நந்தன்
பேரின்பந் தனைத்தந்த திரு மகனே
அருங்கருணைத் தனைக் கொண்ட தேவேயென்று
மவுன்தன் றிருப்புகழை நினைந்திடாயே!

தேவு = இறைவன், திருப்புகழ் = பெருமை.

6. நினைப்பாய் எப்பயனுந் நினையாமல் நின்மலனை
நெடுமலங்கள் சொரிந்து கெட்டும்
மனைப்பூசா மனையாள் தனைப்பூசா மீண்டே
மலஞ்சொரியும் சிறுமனிதர் வாழ்வை நெஞ்சே;
களைப்பாற் கடல் கலங்கக் கடைந்த தின்தோள்
கருமணியைக் காதலிப்பார் தேனைக் கண்டால்
நினைப்பாரை விழிப்பாரை தானே காக்கும்
மெய்ப் பொருளைக்கதியாக மொய்த்திடாயே!

நின்மலன் = மலங்களற்றவன்.

7. மொய்த்தொழுகும் பெருங்கிளைஞர் வளையுள்
முன்கை மிகு மனையாள் தொகுமக்கள் பிறர்க
ளெல்லாம்
கைத்திடினும் பொருள்காணிற் பணிவ ரென்றே
கலந்திகழ்வர் இதுமுழுதும் கருதல் நெஞ்சே!
செத்திடினும் பிணிபெடினும் பொருளற்றாலும்
தீவினைகள் தொடர்ந்திடினும் சென்று
மூப்போ
டெய்திடினும் எஞ்ஞான்றும் இகழா தாளும்
எழிலொழிப் பரமனையே யிறைஞ்சி டாயே!

பிணிபெடினும்=நோய் வாய்ப்படுதல். ஆழிப்பரமன்=திருமால்

8. இறைச்சியையும் எலும்பினையும் வேறே கண்டால்
இயம்பரு வெற்றினை யோர் தோலால் மூடி
மறைத் தொரு பெண்ணுருவாக் கிற்கக் கண்டு
மால் கொள்ளும் உலகியற்கை ஒட்டேன்
நெஞ்சே!
பிறையுலவும் சுடர்க்கடவுள் பேணும் சோதி
பேரரவக் கனைகடலுள் பிறங்கு வெள்ள
மறைத் தொருமீன் முதலுடைய கடவுள் மூதூர்
வாய்த்த புகழ் வட மதிரை ஏத்திடாயே!

மால்=மயக்கம். ஆசை; சுடர்க்கடவுள்=சிவன்;
வடமதுரை=கண்ணன் வளர்ந்த இடம், மீன்முதற்கடவுள்:
திருமாலின் மச்சாவதாரம்.

9. ஏத்துமிகு புகழ் விருமைக் கருமம் பேணேல்
இருங்கனலைக் கைநயவேனெற் கைப்பொல்லா
ஊத்தையுடல் பேணுநர் நல்லகந் நோக்கேல்
உடற்பிறவிச் சிறைகடக்கை உறுவன் னெஞ்சே
ஆர்த்தபுகழ் வடமதிரைக் கஞ்சன் றுஞ்ச
மல்லொடுங்க மதகளிறும் மடியச் செற்ற
வாய்த்த புகழரங்கனையே வணங்கி வாழ்த்தும்
வரிசையினை இனியேனும் அடக்கி டாயே!

ஊத்தையுடல்=நாறும் உடல் கஞ்சன்=கண்ணனின் தாய்மாமன்
மதுரைமன்னன். மதகளிறு=குவலயாபீடம் எனும் யானை.
இருமைக்கருமம்-இம்மை, மறுமைக்குரிய நல்வினை, தீவினைகள்.
மல்லொடுங்க-சாணூர மல்லர்கள் வீழ.

10. அடங்காத பெருங்காதற் சுற்றத்தா ராற்ற
ஆருயிரார் போதலும் மெய்யணைய வீழ்ந்து
தடங்காதற் மனைவி சுற்றம் தந்தை தாய் ஒருவிப் போக
தாதியார் சுடுமுடலை நயவேன் நெஞ்சை!
மடங்காத விரணியன்றான் நாளை மாள
வாளரியாய் உயிர் செகுத்த வள்ளல் வேயொக்கும்
தடந்தோள்மா தராரைத் தழுவு திண்டோள்
தத்துவன் தாள் ஏத்துவதே சதிர் கண்டாயே!

தாதியர்=வேலையாட்கள், வாளரி= நரசிங்கம், சதிர்-அறிவு
உயிரார்-உயிர். ஒருவி-அகன்று.

11. சதுரர்களால் நறுங்கலவி பிணிமூப்புச் சாக்காடென்னும்
சலத்தினுய்யத் தயாபரனைப் பணியாய் மனமே
வெதிரர்களும் வெம்பகையும் அழிநோய் கொண்டு
வெறுத்துடல முழலக் கண்டும் நெஞ்சே
அதுரிபரி வளையாழி கெதைவாள் வில்லுக்
அடல்முசலம் அங்குச மாசாபம் என்னும்
கதிரணவு வன்திரள் தோள் கமல நாபன்
காமரூபி புகழ்க்கடலைக் கலந்தி டாயே!

தயாபரன்=கருணாகரன், திருமால்; கமல நாபன்=பத்மநாபன்
காமரூபி=விரும்பத்தகும் உருவமுடையவன்; ஐம்படை-சங்கு, சக்கரம், கெதை, வாள், வில் என்பன. முசலம், அங்குசத்தையும் சேர்த்துக் கூறுவர். சலம்-அழுக்கு.

12. கலந்த பிணி பசிபகைஞர் கன்னீர் காற்று
கடுவிடங்க ளாயுதங்க ளரசர் தெய்வம்
மலந்தழுவு முடல் கெடுப் பானமைந்து கண்டால்
மற்றிதின்மே லினியாசை யறுத்து நெஞ்சே
நலந்திகழும் பெருங்கண்ணும் பவழ வாயும்
நற்றோளும் பொன்முடியும் நினைந்து நினைந்திட்
டலந்துருகி யணியரங்கா என்றியாம் விம்மி
அனைத்துலகும் கடந்தவனை யணுக லாமே!

அணியரங்கன்-திருவரங்க நாடு எனும் திருவங்காடு எனும் இராம சுவாமி கோயில் இறைவன். கன்னீர்-கல்லும் நீரும்.

13. ஊக்கமணம் புணர்வார் கெடுவார் வாழ்வார்
உழைப்பார் ஒண்கலன் கழிப்பார் நகு
வாரியாக்கைத்
திக்கதுவ ஐயோ! வென்பார்! பிறப்பார் சாவார்
சீச்சீ யுலகியற்கை யென்றேக்கறு நெஞ்சே
ஏக்கமிரிந் தைம்புலனு மடங்கப் பேணி
இரைத்து மாருதமும் மாமலமு மொருக்கிய
போகமிகு மலம் வரித்தாங் கதனுள் நின்று
பொய்ச்சுடரால் பரஞ்சுடரைப் புக்கிடாயே!

ஏக்கறுதல் = துன்புறுதல்; பொய்ச்சுடர் = பொய்யாகிய உடல்.
மாருதம்-காற்று ஏக்கமிரிந்து-துன்பத்தைப் போக்கி.

14. புக்கவுடல் பெய்வதற்கே நல்லை யாகாய்!
பொருளதுவே சதமெனப் போய் பொய்யைப்
பற்றி
இக்கரும மிரண்டினுமே புரண்டு நாளும்
இடர்க் கடலுள் கிடந்துழைக்கும் ஏழை
நெஞ்சே!
சக்கரமும் பெருஞ்சங்கும் கெதையுமேந்தி
தாமரைக் கண்ணொளி தியங்க தமரப் புள்ளின்
மிக்கதிரு வுடற்கினிதாய் யன்பாய் நின்ற
வேதாந்தப் பெருவெளிக்கே விரும்பிடாயே!

கெதை = கௌமோதகி எனும் கெதை, தண்டு. வேதாந்தப்
பெருவெளி = துறக்கம்; தமரப்புள் = கருடன்.

15. விரும்பு மனைத் தாய்மாரும் தந்தைமாரும்
வியன்கிளைஞர் மேல் வருவார் கீழாய்ப்
போனார்
அரும்புரைக் கொப்பூழ்ப் பொன்ற வனந்த கோடி
யவர் நினக்கே நீயவர்க்கே யானாய் நெஞ்சே!
சுரும்பமரும் துழாய் முடியும் நெடிய தாளுஞ்
சுந்தரத் தோளாயிரமு முடைய சோதி
கரும்பமரு மொழி யனையாள் கணவன் கீர்த்தி
கடக்கடவா திவ்வுலகைக் கடந்திட் டாயே!

சுரும்பு = வண்டு; துழாய் = துளசி; கீர்த்தி = புகழ்.
திருமாலுக்குக் தோள் ஆயிரம் என்பதால் உருவம் ஆயிரமும் பெயர்
ஆயிரமும் பெறப்படும். கரும்பமரு மொழியனையாள்-இலக்குமி.

16. கடந்தாய் உலகந்தனை வாழ்க்கைக் [illegible]
ழாட்டாய்
கள்ளம் விழ்ந் துள்ளத்துயர்க் கடலுள் விழ்ந்து
கிடந்தாய் ஓர்கரை காரை யானாய்! நெஞ்சே!
பயந்தினி நீ செய்வதுதா னென்னை? நையாய்
படர்ந்தா னிந்திரர்க் காய்ப் பார்த் தர்க்காய்
பகைத்தோ னிடத்தில் பண்டு தூது
நடந்தானே குடந்தைநகர்க் கிடந்த மாலே
நம்பரனைப் பரவுதலை நயந்தி டாயே!

பார்த்தன்-அர்ச்சுனன்; குடந்தை=கும்பகோணம்; இராமகுடமுமாம். மால்=திருமால். நம்பரன்=நம் தலைவன். பயம்-அச்சம். 'கொங்கேறு சோலைக் குடந்தைக் கிடந்தானை, நங்கோனை நாடி நறையூரில் கண்டேனே' என்பது திருமங்கை யாழ்வார் பெரிய திருமொழியாகும்.

17. நயந்தொரு கால் நம்முடலைப் பேணிக் காத்தும்
நாளாக நம்முடலில் பொடியல்லால்
பூமியில்லை
அயர்ந்தொருகால் நாம் பிறவா யோனி யோனை
அழிந்துமனம் கரைந்துநிதம் வாழ்த்திச் செல்ல
சயந்தைநாடிக் கயிறும் பிடித்து நின்ற
தார் விசயற் கேழுலகும் தமதே யாக்கி
பயந்தலையாய்ப் பார்த்தனுக் கன்றருள் பாலித்த
பரமன் தன் பெருங்கருணைப் பருகி டாயே!

பூமி-பெருமை. பெனமன்-பெருமையுடையவன். பிறவாயோனி=பிறவாயாக்கை,(உடல்) கடவுள். பாலித்தல்=செய்தல். சயத்தை என்பது சயந்தை என்று வருவது மெலித்தல் விகாரம்.

18. பருகரிய கடலுவரி நீரைப் போல
பயனிலாப் பேருவகைப் பற்றி நோக்கில்
ஒருகருமமுனக்கில்லை யதங்கமில்லை
யொழியொழிநீ புலகோடுறவு நெஞ்சே
திருகுனைத் தசமுகன்றன் றசையாச் செல்வம்
தென்னிலங்கைத் தீவிழச் சிலைக்கைக் கொண்டு
பெருகுபுகட் டயரதன்றன் மதலை யன்பால்
பெருங்கருணைத் திறங்களையே பேணிடாயே!

[illegible]; அரங்கம் [illegible]
மழுங்கல்=குறைந்த. அன்பா=நிலைத்த. தசமுகன்-இராவணன் (தசகண்டன்)

22. மேவுபிணி பலகிளர்ந்து தளர்ந்து சென்று
மிகவாய்த் தடுமாறி யுலகம் வீழ
ஆவியெழு போதுதை இயமனார் தூதர்
அழுந்தடிக்கும் கொடுமுறைகள் ஆற்றே
னாற்றேன்

காவிகழி படர்குவளை நீலம் காயாக்
கருமேக மவையுரைக்கும் கருந்தண் மேனி
பூவில்மகள் மணவாளன் துவரை வேந்தன்
பொன்னடிக ளிரண்டினையும் பொருந்து
வேனே;

துவரை=துவாரகை; பூவில்மகள்=இலக்குமி;
துவரைவேந்தன்-கிருஷ்ணன்.

23. பொருந்தலர்போல் யமதூதர் பற்றி யீர்ப்ப
பொருகரடி புலி செந்நாய்க் கவரப் பொல்லா
பருந்துபடர் பெருவனத்துள் படுமுள் பாய்ந்த
பாவிகள்போம் கொடுநெறிநான் காணேன்
காணேன்

கருந்தடங்கண் வெண்முறுவல் கமலச் செவ்வாய்
கனகத் திருமேனிக் கமல மங்கை
இருந்த திரு வாரமார்ப னடியார்கள் சேரும்
இன்பமிகும் பெரும்பதம் நான் ஏகு வேனே!

கனகம்-பொன், கமலமங்கை-இலக்குமி. ஆரமார்பன்-கௌஸ்துபம்.
பெரும்பதம்-மோட்சம். பொருந்தலர்-பகைவர்.

24. ஏகுமிடம் புகைபரந்தங் கிருளால் மூடி
எறிகுறட்டை யெனும் குரலைப் பெருக்கி
காகமிகு புழுமுளைக் கவரப் பொல்லா
கடையவர்போல் கொடுநெறி நான் பாரேன்
பாரேன்

நாகமிகு பணநிரையின் அரங்க மேறி
நடைபயிலும் திருக்கூத்தைக் காண் நந்தன்
போகமிகு குலக்களிறும் அயனின் தாதைப்
புகழினை நினைந்தவன் பால்போக்கு வேனே!

பணநிரை-பத்திகளின் வரிசை, நந்தன்-நந்தகோபாலன்.
அயன்-பிரம்மன், நடம்-நடனம், தாதை-தந்தை.
அயனின் தாதை-திருமால் (விஷ்ணு)

25. போக்கரிய வறுபதி னாயிரம்வன் னாகம்
    பொங்கெரியில் புக்கழுக்கில் புக்கபால் மூடி
நீக்கரிய நெடுநரக மனந்த கோடியிந்
    நரகமனைத் திலுநான் நீடேன் நீடேன்
வாக்கினொடு மனங்கருமம் என்றிம் மூன்றும்
    மாதவர்க்கே யறந்தினையா மடுத்து யானென்
னாக்கையையு மாவியையு மவர்க்கே யாக்கி
    யவனைநினைந் தவன்பாத மணுகு கின்றேன்!

(அறுபதினாயிரம் அக்குரோணி-கம்பர்), நீடேன்-நிலைக்க
மாட்டேன், மனஸா, வாசா, கர்மணு என்பர் வாக்கு
மனங்கருமத்தை.

26. அணைவரிய நெடுநாக மனந்த கோடிக்
    கோடியினு மவர்கடந்தும் காத்தல் எய்தா
பிணமெரிய நெடுமாய வலையுள் விழ்ந்து
    பொய்க்சுவர்க்கப் படுகுழிக்குப் போகேன் . போகேன்
பணைபெரிதாம் மருதிறுத்துச் சகடம் பாய்ந்து
    வரிபிளந்துப் பாடலைத்துப் பரித்தே ரூர்ந்த
துணைவரிலா முதற்சோதி யமுத வெள்ளச்
    சுவைக்கடல்தன் திருவடியை தொழுகின்றேனே!

வரி-குதிரை, சுவர்க்கத்தையும் நரகத்தையும் படுகுழி என்கிறார்.

27. தொழுதகைய யயனரனிந் திரன்மார்க் கண்டன்
    சுடர்க்கடவுள் யமன்நிருதி வருணன் வாயு
கொழுந்தண்மதி யீசானன் முதலா யுள்ள
    கூட்டமமரர் பொற்பதம் நான் கொள்ளேன் கொள்ளேன்
எழுந்தகட லழுந்திய பேருலக மூன்று
    எயிற்றெடுந்து வயிற்றடக்கி யென்னையாண்ட
செழுந்தண்முகிற் றிருமேனி செங்கண் செவ்வாய்
    செய்யகமழ் திருப்பாதம் சேர்கின்றேனே!

இந்திரன், அக்நி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன்,
ஈசானன் போன்றோர் அஷ்டதிக் பாலகர்கள், எயிற்றெடுத்து—
பன்றியின் கோரைப் பற்களால் தூக்கி, அரன்—சிவன்,
மார்க்கண்டன் என்றும் பதினாறு வயது பெற்ற முனிவர். சுடர்க்
கடவுள்—அக்நி, தண்மதி—சந்திரன், எயிறு-பல், கொம்பு இங்கே
வராகவதாரம்.

28\. சேரார்களைச் சிறியவரைக் கொடுமை செய்யா
செய்யர்கள் பேராசைப் பொய்ய ரென்றும்
பாரார்கள் பிறர்தாரம் பகரார் நுண்சொல்
பயிலார்கள் கொலை நிலையில் பணியா
ரியார்க்கும்
காராக வெள்ளெயிற்றுச் செங்கடுங்கண்
கவிர்குளம்பின் நவிர்துளையில் கனுலு மீளி
வாராகத் திருவுருவாய் என்னை யாண்ட
வள்ளல்புகழ் மலரடிக்கீழ் மன்னு வேனே!

சேரார்கள்-பகைவர்கள்; வாராகத்திருவுருவம்-பன்றியுருவம்
மன்னுதல்-நிலைபெற்றிருத்தல்; செய்யர்கள்-நல்லவர்கள்.
வராகபுரி-பன்றியூர் (பாலக்காடு மாவட்டம்)

29\. மன்னாத புகழுடலை மதிப்பா ரல்லர்
மதிபெரிய பெரியவரை மதிப்பர வையத்
தொன்னாரும் உறவரும் என்றிரண்டும் என்றிவ்
வுயிர்முழு துந்த மதுயி ரோடொக்கப் பார்ப்பார்
பொன்னாரும் அணி மருங்குல் ஆயர் மங்கைப்
புதுமுலைக்காய் எருதேழும் பொருது தன்னை
யுன்னாத மறக்கஞ்சன் நிற்க வந்த
சுந்தரன் தாள் தந்தலைமேல் சூட்டுவாரே!

மதி-அறிவு, ஒன்னார்-பகைவர், உறவர்-உறவினர்
மருங்குல்-இடை, ஆயர்மங்கை—ருக்குமணி, சுந்தரர்—அழகிய
நம்பி; மன்னாத—நிலைக்காத. ஒன்னார்╳உறவர். நிற்க-நின்று
போக.

30\. சூட்டியபூ நறுங்குழலா ருலகந் தொல்லைச்
சுடர்க்கனக மிவைமுதலாய சுருதினன்னூல்
காட்டிய வேடனைக் கடந்த குணங்களெட்டின்
காதலையும் கடந்துவகை கடக்க வல்லா
வீட்டியபோ ரிரணியன்றன் மார்வம் பீற
வெழுகுருதி களுணனை னறய வெட்டுண்ட
போலே

கேட்டுயர்வோ மடல்புணர மடியச் செற்ற
கிளரரிதன் வளர்புகழ்க்கீழ்க் கேழுவாரே

எண்குணம்:- தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கை யுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங் குதல் பேரருளுடைமை, வரம்பிலற்றா லுடைமை.
எண்குணங்கள்:- அநந்தஞானம், அநந்த தரிசனம், அநந்த விரியம், அநந்த சுகம், அநந்த நாமம், நிஷ்களம், நிராயுதம், சற் பாவனை என்பன (சிலம்பு. பக். 262. (உ. வே. சா)
பிற-கிற கேழுதல்-இரங்கல்.

31. கெழுவுசுகப் பெருங்கடலே யென்ன நின்ற
கேசவனை எம்மானை கைம்மா காத்த
பழுவிலருள் பரமனை யென்னமுதே யென்றால்
பாவனையின் பயனை என்மணியை நந்தன்
தழுவுதிரு புகழரசைச் சனகன் பெற்ற
தார்குழலாள்த் தனியாளைத் தனதாக்
கொண்டான்
குழுவினிடைப் படுமழுதைக் குமுதச் செவ்வாய்
கோசலைதன் திருமகனைக் குலாவுவேனே!

(சுகப்பெருங்கடல்-சுகவாரி, கேசவன்-கேசி என்ற ஓர் அரக்கனைக் கொன்றவன், கிருஷ்ணன், கைம்மா—யானை; சனகன் பெற்ற தார் குழலாள்—சானகி, சீதை; கோசலைதன் திருமகன்—இராமன்.)

32. குலாவு சுடர்ப்படை யெங்குமெங்குந் தோள்கள்
குருமணிசேர் முடியெங்கு மெங்கும் கண்கள்
குலாவுகுழை செவியெங்கு மெங்கும் செவ்வாய்
உலகொடுங்கும் வயிறெங்கு மெங்கும் மார்வம்
சுலாவுமெழிற் குறங்கெங்கு மெங்கு மாடை
சுந்தரம் பொற்செவி எங்குமெங்கும் சோதி
கலாவியெனக் குயிரா யென்றுமுயிரின் னின்ற
கண்ணனை என்னமுதினை நான் காணும்
காலே!

(குருமணி. குருவிந்தம், நவமணிகளில் ஒன்று, ஆடை-பீதாம்பரம் குறங்கு-தொடை, கண்ணன்—கிருஷ்ணன்).

33. காணுநிலன் புனல்கனல் கால்விசும்பென் றைந்தும்
காப்பரிய புலன்பத்தும் அவற்றின் காதல்
பேணுநிலைப் பொதியைந்தும் கரணம் நான்கும்
பெருமூலத் தனிவித்தோ டிருபத் தைந்தாய்
ஆணுயிராய் அளவயு மல்ல தாகி
அவற்றினையுங் கடந்தமலர்ச் சுடராயன்பின்
தோணிகொடு துழைவார்கண் தொடர நின்ற
சுந்தரன் வந்தென்னெதிரே தோன்றினானே!

கரணம் 4 சரியை, கிரியை, யோகம், ஞானம்,
பூதம் 5 + புலன் 10 + பொதி 5 + கரணம் 4 + வித்து 1 ஆக
இருபத்தைந்து மூல வித்துக்கள்.

34. தோன்றுபெரு நிலனல்லன் புனலு மல்லன்
கனலல்லன் காலல்லன் படர்வா னல்லன்
ஆன்றநிலைப் பொதியல்லன் மனமுமல்லன்
அகக்கரண மவையல்லன் மூலமல்லன்
ஏன்ற தொழிற் பேரல்லன் எல்லா மல்லன்
இவை படைத்தாங்கிவையளித்தாங் கிவையுண்
டானே
போன்றிவை யாய வற்றிடை என்றிவற்றை
யெல்லாம்
பொய்யாக்கித் தான் மெய்யாய்ப் புறம்
நின்றானே!

புனல்—நீர், கால்—காற்று, பொதி—உடல்.

35. புறமல்லன் அகமல்லன் பக்கமல்லன்
பொய்யல்லன் மெய்யல்லன் பொருந்து காட்சி
அறமல்லன் மறமல்லன் பிறவுமல்லன்
ஆணொடு பெண் ணல்லனாங் கலியு மல்லன்
துறவல்லன் பற்றல்லன் பற்றி னோக்கி
தொழிலல்லன் சொல்லல்லன் மனமு மல்லன்
இறவல்லன் நடுவல்லன் முதலு மல்லன்
எனுங்கால் அவையாவான் யார்கண்டீரே!

இப்பாடல் விரோதவணிக்குச் சான்றாய்த் திகழ்கின்றது.
இறவு-ஈறு, இறுதி.

36. கண்டலங் கொண்டன்றியே நோக்கு மூக்கின்
கதிர்துளை கொண்டன்றியே மோக்கும் நாக்கின்
ஒண்டலங் கொண்டன்றியே சுவைக்குஞ் சாட்சி
யுடலிடங் கொண்டன்றியே யுணரு மோசை
குண்டலஞ்சேர் செவிவழியு மல்லாக் கேட்கும்
கூர்மனங் கொண்டன்றியே யுணரும் கொற்றத்
திண்டலஞ்சேர் கொடும் படையும் தொடாது
வெல்லும்
சீருயிரான் றனையுணர்ந்த செல்வ னார்க்கே!

கண்டலம்-கண்தலம், மோக்கும்-முகரும், திண்டலம்-திண்மை, கொடும்படை-ஐம்படைகள்.

37. செல்லாதான் சென்றானைப் போன்று மென்றும்
திசையாதான் திசைத்தானைப் போன்று
மென்றும்
சொல்லாதான் சொன்னானைப் போன்றுமென்றும்
துயிலாதான் துயிலான்தனைப் போன்று
மென்றும்
இல்லாதான் உடையானைப் போன்றா மென்றும்
தாராதா னிரந்தானைப் போன்று மென்றும்
நில்லாதா னின்றானைப் போன்று மென்றும்
நிலைய தனை நினைப்பா ரன்னிலைபெற்றாரே

இப்பாடலிலும் முரணணி பயன்படுத்தப்பட்டுள்ளது. அதனால் தண்டி யலங்கார காலத்திற்கும் பிற்பட்டவர் இப்புலவர் பெருமான் என அறியலாம்.

38. பெற்றதிரைக் கடல்கிளர்ந்து படியேழ் மூடிப்
பிறங்குதிசை விளிம் பெறிந்து பெருமூ தண்டத்
துற்ற நெடுமுடி திறந்து விளறி யெங்கு
மொன்றாய பெருவெள்ள மொடுங்கும்
வண்ணம்
கொற்ற மணிக் கயலாய்த்தம் வயிற்றி லாங்கோர்
கோலச் செலுவின் விரை திணித்த கோவனேம்
துற்றசுடர்ப் படையானே யென்னை யாண்ட
தூமுகிலே யென் சொல்லிச் சொல்லு கேனே

படியேழு-உலகம் ஏழு, கோவன்-கோபம், நந்தகோபன் மகன் சுடர்ப்படை—சக்கராயுதம், தூமுகில்—கார்வண்ணன், கோலச்செலுவிரை—எல்லா சீவராசிகளின் விதைகள்.

39. சொல்லரிய பழம்புணரி குழம்ப வம்பு
சொரியர் பிறங் குலவிலங்க லஞ்சூழ்ந்த
பேழிவாய்
வல்லரவத் தகடுகடுத் துதிரம் நீட்டி
மணிவரைத் தோளாயிரவு மெடுத்த காலைத்
தொல்லுலகு சுழன்று திசைச் சுழன்று மேலே
சுரர் சுழலச் சுடர்சுழலச் சுழலும் குன்றம்
செல்வமணித் திருமுதுகின் நிறமுந் தீர்த்த
திறலானி னடிவடி யேனேற்றி னேனே!

அகடு-ஆகம், முதுகின் திறம்-நெஞ்சின் வலிமை, கருத்து-சிதைத்து'
சுரர் தேவர்; பழம் புணரி-பாற்கடல்; சுடர்-சூரியன்.

40. தேறாத பெருங்கலங்கல் புணரி வெள்ளம்
திருக்குளம்பின னிடைச் சிறிதோர் புறையிற்புல்க
மாறாத வளர் புவனமேழும் சென்றோர்
மறைப் பகத்தின் முறைப் பகத்தை மறைக்கப்
பார்மேல்
ஏறாத மணமகளைக் கொண்டு பொங்கி
யிடையெங்கும் காண்பரிதா யெழுந்த கோலத்
தாறாத சினக்தழ லுருவம் கொள்ளும்
அருமுதல்வன் அடியேனை யாள்கின்றானே!

புணரி-கடல், புவனம்—உலகம், அருமுதல்வன்-அரிய தலைவன்;
திருமால்

41. ஆளரியி னகத்துருவாய் முதுநீர்ப் பக்கத்
தாழ்கடல்கள் சுழல்விழியால் மடுத்து வம்பும்
நீனெறியிற் துறு கொள்ளவும் ரோமந் தோறும்
நிமிர்புகைகள் விசும்படங்க நிமிர்ந்து பொங்கி
கோளரியக் கொடியவிறற் பொன்னின் மார்வம்
கூருகிரா லிருபிளவி லடங்கச் செய்த
வாளரியினகத்துருவாய்க் கமல மங்கை
யாகமணிக் களிற்றினை நான் நம்புவேனே!

ஆள் அரி—நரசிங்கம், கோளரி-வலிமை மிகுந்த சிங்கம்,
ரோமம்-மயிர், பொன்னின் மார்வன்-இரணியன்
கமலமங்கை-இலக்குமி.

42. நம்பரனே உரைகடந்த தன்றே மூன்றும்
ஞாலமெல்லா மோரடிக்கீழ் அடக்கியொன்றாய்
உம்பர்மிகு அரர்பணியப் பணிய பதத்தை மேலே
யொண்மலரோன் னகர் கடக்க ஓட்டி யாண்டு
அம்பொன் நெடுமுடி துறந்து நெடுநீர் தீக்கால்
அடவிக ளென் றிவை கடந்தாங் கவற்றின் மேலாம்
செம்பொன் நெடுஞ் சோதிக்கே செல்லல் உய்த்த
திருக்குறளன் பேருஞ் செப்பீர் தெரியுங்காலே

உம்பர்-வானவர், சுரர்—தேவர், அடவி—காடு,
திருக்குறளன்-வாமனன்.

43. தெரியுமனத் தடல சுரருடலம் பொங்க
திரள் பிணத்தின் கணக்குன்று திளைக்கத் திண்மை
எரியுமணிச்சுடர் மழுவாளே ழுமேழு மேழு
முறையு மெறிந்தவனிப் புவனி யெல்லாம்
விரியுமனத் தொருமுனிவர்க் கருளித் தான் தன்
மெய்ச்சோகு நிலைநினைந்து வெகுளி தீர்ந்த
பரசு கரத்திரா மனையென் னமுதை யென்றன்
பாவனையின் பயனினைநான் பருகுவேனே!

ஏழும் ஏழுமேழும்-பரசுராமன் 21 முறை அரசரை யொடுக்கியதாக
வரலாறு. ஒரு முனிவர்—ஒப்பற்ற முனிவர், காசியபமுனி—மழு
வாளெடியோன்—பரசுராமன், பரசு-மழு,
பரசுகரத்திராமன்-பரசுராமன், பாவனை-கற்பனை

44. பரந்த கடல் திடர்படுத்துப் பதணம் கட்டிப்
பரிவிலங்கைப் பிடித்திலங்கைப் பணியைச் சூழ்ந்து
பொருந்துமதில் பொடிபடுத்து கடுத்து மீளிப்
பேரரக்கர் குலம்மயங்கப் பொருத செல்வ!
அருந்தவம் செய் தருள் பெற்ற முட்டாச் செல்வத்
திராவணனை யிராவண்ணம் செய் தகிலச் செல்வத்
திருந்த குணத் தவர்க்கிளையார்க் களித்த வள்ளல்
சீரமுதுண் டடிநாயேன் றேறினேனே!

முட்டா-குறையாத, இராவண்ணன்-இல்லாத படிக்கு,
அரக்கர் குலம்-இராவணன் குலம், தேறினேன்—உய்ந்தேன்
இளையார்-விபீடணன்.

**45.** தேனேறு பொழில்புடை சூழ்க்கா சியென்னும்
திருநகரம் பெரு நீறாய்ச் சிதையத் திண்கை
கூனேறு முசலங்க ளெடுத்துப் பின்னும்
குருபதியர்க் கருட்புரிந்து கொடிய மல்லர்
வானேறப் பொருது கரிமடியச் செற்ற
வளையுருவன் பெரும்புகழன் விரும்புகின்ற
யானேறும் பெரும்பதங்க ளுரைப்பே னாயில்
இந்திரர்க்கும் திசைமுகற்கும் ஏறொணாத

குருபதியார்-பாண்டவர் கரி-குவலயாபீடமென்னும் யானை
மல்லர்-சாணூரன் போன்றோர். திசைமுகன்-பிரமன்.
வளை-பாஞ்சசன்னியமெனும் சங்கு.

**46.** ஏறுபொதி யிறச்சகடம் விகடப் பேச்சி
யிணைமருதம் பணியரவம் பரியே றேழும்
ஊறுமதக் கரிமல்லர் கஞ்சன் றுஞ்ச
ஒள்ளரக்கர் முரண்வாணன் உவப்பில் மற்றும்
நீறுகதத் தாலுவரிப் புவனி யுள்ள
திறலரக்கர் முதல் சிதைற சிதையாக் கீர்த்தி
நாறுபுகழ் துழாயலங்கல் நந்தன் பெற்ற
நன்மகனை நாயடியேன் நண்ணுவேனே!

கதம்-கோபம்; பொதி-உடல், விகடம்-வஞ்சனை, பேய்ச்சி—பூதனை
யெனுமரக்கி கரிமல்லர்-சாணூரன் முஷ்டிகன், புவனி—உலகம்,
நந்தன்-நந்தகோபன், துழாய்-துளசி.

**47.** நண்ணுகடை யுகமுடிவில் நெடுநீ ரையன்
நான் மறையின் நெறிகடந்து நலந்தீர் செய்கை
பண்ணுசம யவனும்பல வெற்றி யெல்லாம்
பாபமுடன் றிடர்க்கடலுட் படியுங் காலை
அண்ணல்நெடும் பரியேறி நெடுவேல் ஏந்தி
ஆருயிர்க ளற்றம்நிறுத் திமறத்தை மாளப்
பண்ணுஞ்சீர் எழில்கற்கி யுருவங் கொள்ளு
மெம்பெருமான் அடியேனை டிருக்கின் றனே!

கற்கி-கல்கியவதாரம், கடையுகம்-நான்காவதான கலியுகம்
கல்கியின் வாகனம், குதிரை; ஆயுதம், வேல்.

48. இருக்குமறைப் பொருளென்பர் மறையோ ரெங்கள்
இன்னுயிரென் றுரைசெய்வர் முனிவ ரெங்கள்
தருக்கையடும் கூற்றென்பர் அசுர ரெங்கள்
தனிச்சர ணென்றுரை செய்வர்தேவ ரெங்கள்
பெருக்கு நலத் தன்பரென்பர் அடியா ரெங்கள்
பிள்ளையென மகிழ்ந்துரைப்பர் ஆய ரெங்கள்
நெருக்கு முலை வீடனென்பர் மடவார், எங்கள்
நெடுமா லிவ்வனைத்துமாய் நிகழ்கின்றானே

இருக்குமறை-இருக்குவேதம், நால்வேதங்களுள் முதலாவது
மறையோர்—பிராமணர்கள், தருக்கு—அகந்தை, கூற்று—யமன்,
வீடன்-காமுகன், கணவன். ஆயர்—ஆயர் பெண்கள்;
மடவாருமாம. வீடன மணிமேகலையில் விடன் என்று வரும்.

49. நிகழ்ந்தவகை புலமைந்தும் புலனாய் நின்ற
நெடுமதமா முனிவேழந் நினைந்து நின்னை
புனைந்துதுதி முடிப் பளவில் தன்முன் புக்க
பொய்யறியாப் பெருவள்ளால் புகழ்த்தேன்
பாய
திகழ்ந்தகவிச் செழுமலரா லென்னை யாண்டு
திருச்சரணம் நினைவேனைட் பெரிய னாக்கி
இகழ்ந்ததொழி லாலொழித் திட்டவென்னை
இனியஞ்சல்! என்றருளி யேற்றுக்கொள்ளே!

முனிவேழம்—குகூ எனும் கந்தருவனாகிய யானே. திருச்சரணம்-
திருவடிகள்; புலமைந்து, மண், விண், தீ, காற்று, நீர்.

50. ஏன்றநிலைக் கொப்பூழோ டிசைந்து நின்ற
எட்டுபத்தீ ராயிரம்நா டிகளின் மேலா
மூன்றிவழி நாடிகளின் நடுவே நின்ற
முதனாடி வழியேறி புகழ் கொண்டார்க்கு
ஏன்றுமெழிற் பிழம்பினையென் னமுதை யென்றன்
சுவைக்கடலைச் சுவை கண்டால் மீளாச் செல்வி
யான்றநிலைப் பெருந்தேனை விழுங்குகின்ற
அடிநாயேன் களித்தொருகா லாடு வேனே!

கொப்பூழ்-தொப்புள், உந்தி. எட்டுபத்தீராயிரம்—பதினாறாயிரம்
நாடிமூன்று-வாதம், பித்தம், சிலேஷ்மம்.

51. ஆடுபடத் தரவுறையுந் தலங்க ளேழும்
அலைகடலின் பிறங்கிடந்த வவனி யேழும்
நீடு நிலைச் சுரர் நாடும் அசுரர் நாடும்
நிறை குணங்களிரு நான்கும் நிகரொன்றில்லா
வீடு மெனக்கே பெறினும் வேண்டல் கொள்கை
விரைவிரகு துழாய் முடியா னமைச்சர்
தொண்டர்
கூடுமிடத் துடன்கூடி அவன்றன் கீர்த்தி
கொழுஞ்சு வைத்தேன் பெருங்கடலில்
குளிக்கின்றேனே!

தலங்கள் ஏழு-ஏழு கடல்கள் அவனி-உலகம், சுரர்நாடு-தேவருலகம்
அசுரர் உலகம்-பாதலம், வேண்டல்-விரும்பமாட்டேன்.
இருநான்கு குணம்-எண்குணங்கள். அநந்த ஞானம், அநந்த
வீரியம், அநந்த தரிசனம், அநந்த சுகம், நிர்ந நாமம்,
நிர்க்கோத்திரம், நிராயுஷ்யம், அழிய, வியப்பு என்பவை
(அநந்த நாமம் நிஷ்களம், சன்பாவனை.

52. குளிரார் பரவைக்குகைக் கிடந்த உலகத்துள்ள
குலமுனிவர் மாதவர் செடியொன் றில்லா
ஒளியமரர் ஒள்ளியக்கர் சித்தர் விச்சா
தரர்கின்னரர் கிம்புருட ரும்பர் வாழுர்
நளிமனிதர் முதலாக முடிவொன் றில்லா
நாலுயோனிச் சராசரமும் கேண்மின் கேண்மின்
அளிவிரவு துழாய் முடியான் கமலச் செம்போ
தாதரித்தோன் அவனுமெனக் கருளி னானே!

நாலுயோனி சராசரம்-மனிதர், விலங்கு, பறவை. ஊர்வன கமலச்
செம்போது ஆதரித்தான்-தாமரை மலரில் வீற்றிருக்கும்
இலக்குமியின் கணவன். செடி-குற்றம், மாசு.

53. அருளுடையான் அருளுடையாய் முறையோ
என்னை
யாளுடையாய் ஆளுடையாய் முறையோ ஐயா!
பொருளுடையார் போலென்னைப் பற்றாயாகில்
பொய்க்குழியில் விழுகின்றேம் போகாச்சிந்தை
மருளுடைய இரணியன்றன் மார்வ மென்னும்
வன்மலையை மணிநகத்தாற் இரிய வீசி
தெருளுடைய இன்மகனை யாண்டு கொண்ட
திருவாளா யென் செய்கேன் செய்யக் காணே!

மருள்-மயக்கம், தெருள்-தெருட்சி, பயம், இன்மகன்—இரணியனின்
மகனான பிரகலாதன். இப்பாடலில் சொற்பொருள் பின்
வருநிலையணி வருகின்றது.

54. செய்யமுலைத் திருமடந்தை விடனே யென்பன்!
வழியடியார்க் கென்று மென்றும் வாழ்வே யென்பன்
மெய்யடியார் புகழினுக்கு ஆளா வென்பன்
மேதகுசீர் குகனன்பு விகிர்தா என்பன்
ஐயமறுத் தடியேனை யாண்டாய் யென்பன்
அடிநாயேன் எனைப்பொழுதும் ஆர்வமில்லேன்!

திருமடந்தை-இலக்குமி, விடன்-காமுகன், காதலன். கணவன்.
ஐயம்-பாசம, மயக்கம்.

55. ஆர்வமிகுத் தடியேனை யாண்டு கொண்டிட்(டு)
ஐம்புலனு மறுவகையு மடங்கப் பண்ணி
சீர்வமிகப் பிழையாமைப் பணிகள் கொண்ட
திருவாளா வெனச் சொல்லு மெந்தன் சிந்தை
ஆர்வம் மிக்கு கரையாவென் னாவி போக்க
வந்தோனே என் செய்கேன் ஐயாபார்த்தர்க்
கூர்வமிகு கொடிந்நெடுந்தேர் பாகு செய்த
கொற்றவனே யென்றுனை நான் கூடு வேனே!

பாகு-ஒட்டுதல், சாரதி, கொற்றவன்-துவாரகாபதி, கண்ணன்.
ஆறுவகைத்தாது-மயிர், தோல, நிணம், நரம்பு, எலும்பு, மூளை.

56. கூடுபுகழ் திருநந்தன் மதலாய் போற்றி
கொடுந் தொழுதின் முலைசுவைத்த குழவீ போற்றி
நீடுறிநெய் தொடவுண்ட நெடுமால் போற்றி
நிலையுரலில்ப் பிணியுண்ட மணியே போற்றி
கோடுபறித்(து) வேழங் குமைத்தாய் போற்றி
குன்றெடுத்து மழைதடுத்த கோவே போற்றி
ஆடுபடத் தரவின்முடி குனித்தாய் போற்றி
அரவிந்த நயனா நின்னடி போற்றியே!

நந்தன்-நந்தகோபன், மதலை-குழந்தை, கண்ணன், கொடுந்
தொழுது-பூதனை, குமைத்தல்-தண்டித்தல், அரவிந்தம்-தாமரை
நயனம்-கண்கள், வேழம்-கஞ்சனின் குவலயாபீடம் எனும் யானை,
அதன் கொம்பினை பறித்துக் கொன்றதாகப் புராணம் கூறுகிறது.

57. போற்றுமனைத் துயருருகப் புகுந்தாய் போற்றி
புகழ் விளங்கு சுமித்திரைதன் புதல்வா போற்றி
ஆற்றல் மிகு புகழனுமன் அன்பே போற்றி
அணிமிதிலைக் குலமயிலின் அமுதே போற்றி
கூற்றத்தியல் கொடுஞ்சரங் களுடையாய் போற்றி
குலையரக்கர் குடிமுழுதும் குமைத்தாய் போற்றி
தேற்றி யென்னைப் பணிகொண்ட மணியே
போற்றி
தென்குடந்தைக் கிடந்தாயுன் சீர் போற்றியே

சுமத்திரை புதல்வன்-இலக்குவன், ஆனால் இங்கு இராமன் மிதிலைக் குலமயில்-மைதிலி, சீதை, அமுது—அமுதம் போன்ற இராமன், சரங்கள்—அம்புகள், தென்குடந்தை-தென்பாலுள்ள குடந்தை; குடபாலூருமாம்.

58. சீர்போற்றுந் திருவுருவைச் சிந்தித் துன்றன்
திருவடிக்கீழ்க் கும்பிட்டு வினைதீர்த் தேனைப்
பார்போற்றும் எழுபிறவிப் பிறவி தோறும்
பணியுகந்தப் பரஞ்சுடரை பரவை கொண்ட
கார் போற்றும் திருவுருவாய் கமலம் போற்றும்
கண்ணிணையாய் கமழ் நறுந்தேன் துளபத்
தெய்வத்
தார் போற்றும் மணிமகுட முடையா யோனைத்
தாங்கினவா கண்டடியேன் தரிக்கிலேனே

பணி—ஆதிசேடன்; பரவை-கடல். தெய்வத்தார்-கௌஸ்துபம் என்கின்ற மாலை வைஜயந்தி; என்பதும் அது.

59. தருக்கின்மிகு சிசுபாலன் பகைமேற் கொண்டு
தாங்கரிய பெருஞ்சினத்தால் வைய வையப்
பெருக்கியவன் கருணையினா லவனை மாற்றி
பிறவியறுத் துடன்கொண்ட பெரியோய் ஊனை
யுருக்கிடும் நின் பெருங்கருணை உரைப்பே னாயின்
ஒன்றொன்றே நினைத்தாலும் உவண மேறி
திருக்கையி லிருவரையேந் தும்வேந்தே யுன்னைத்
தேர்கின்றேன் அடிநாயேன் தேர்கின் றேனே!

வையவைய—இழிவாகப் பேசப் பேச, உவணம்—கருடன் இருவரை-பெரியமலை, கோர்த்தினகிரி, கண்ணன் மணந்து கொண்ட ருக்மிணியை முன்னர் சிசுபாலன் மணக்க இருந்தான். ஆதனால் சிசுபாலனுக்கு கண்ணன் மேல் பகை உண்டாயிறறு. சிசுபாலன்—காசியரசன்.

60. தேராரும்கலை யல்குல் சீதை நங்கை
திருமுகத்துச் சிலைப்புருவத் தயலே சேரும்
பூராரும் கயலிரண்டுப் புக்க மையும்
பூந்தடமாம் முகத்தரசே வெய்ய காதல்
பாராரும் புகழனுமன் குகனென் கின்ற
பழவடியார் பணியுகந்த பரமா வென்னை
யாராக வா வுகந்தாய்? அறிந்தே னுன்றன்
அருட்கடலை அகலிடத் தோர்க் கறிவித்தாயே!

தேராரும்-தேர்த்தட்டையொத்த, அல்குல் நிதம்பம், இடை
பழவடியார்-பழமையான அடியவர்கள் பூராரும்-அழகு நிறைந்த
அகலிடத்தோர்-உலகத்தோர். பணி-தொண்டு.

61. தாயாவா யடியார்க்கு வடிவார் கோலத்
தாமரைமேல் மடமாதும் உகந்தாய் தண்மை
வேயாருமணி யருவிச் சாரல் எங்கள்
மாமலைச் சிலம் பவண்மை யண்மை நோக்கில்
நீயாயது நிற்க நின்னை யென்றன்
நெஞ்சினுளே வெளிப்படுத்தி நின்சீ ரேத்தி
வாயாரப் புகழ்ந் தாடிப் பாட வைத்த
வள்ளாலென் கண்முகப்பே வந்திடாயே!

கண்முகப்பு—கண்முன்னால், தாமரைமேல் மடமாது-இலக்குமி.
மாமலைச் சிலம்பன்–வானமாமலை, திருமால்.

62. வந்தருளி மலர்மகளும் தானும் என்றன்
மனக்கமல மலர்நடுவே வந்து நிற்கும்
எந்தையென் றாயேயென் அமுதே யென்றன்
இன்னுயிரே உலகெழுந்த மலரே இன்றப்
புந்திமடு வுடையானே யடியேன் றன்னை
யுயிர்ப் பெய்து கூத்தாட்டம் கண்டு பண்டு
நந்தன்மனை வளர்ந்தானை யன்றி யொன்றும்
நான்காணேன் றனியிருந்து நாடுங் காலே!

மலர்மகள்-இலக்குமி, புந்தி-புத்தி, நந்தன்மனை-ஆயர்பாடி
யிலுள்ள நந்தகோபனது வீடு, கண்ணன். அங்குதான் வளர்ந்தான்.
கூத்தாட்டம்-ஆய்ச்சியருடன் குரவைக் கூத்தாடியது.

63. நாடுவேனவ னுருவம் காண்பேன் கண்டு
நானன்றே யிறுமாப்பேன் இறுமாந் தாடிப்
பாடுவேன் அவன் நாமம் பயின்று மாத்தேன்
பருகுவேன் அத்தேனின் வடிவே நின்று
ஆடுவேன டலைவிட் டென்னை யாண்ட
வுத்தமனை நினைந்துருகி யொன்றாய்ச் சென்று
கூடுவேன் கோவலூர் காலி யாண்ட
குழலூதும் திருமடந்தைக் கோனை யானே!

கோவலூர்-ஆயர்பாடி, காலி-கால்நடை, ஆடுமாடுகள்
திருமடந்தைக் கோன்—இலக்குமி கணவன்—திருமால்
இறுமாப்பேன்-பெருமிதம் கொள்வேன். மாத்தேன்—கண்ணன்
புகழாகிய பெரிய தேன் கோவலர் ஊர்—ஆயர்களின் ஊரான
ஆயர்பாடி.

64. யானென்று மென்னுடைய பெருமா னென்றும்
எந்தையு மென்றாயு மெனத் தானு மானான்
தானென்றும் சதுமுகற்கும் தொடராகா தானித்
தேனைத்தட மலர்மேல் மடவார் கொங்கைக்
கோனென்றும் கொடுங்கஞ்சன் றன்னை யஞ்சி
கோவாலர் பனைவளர்ந்தான் குணங்க
ளெண்ணி
ஊனின்ற உடற்சிறையை உதறி யான்சென்
றோங்குல கித்தனைக்கு மோங்கி னானே

சதுமுகர்-பிரம்மன், தடமலர்மேல் மடவார்-இலக்குமி கோவாலர்-
ஆயர், கோபாலன் என்பதன் தமிழ்வடிவம்.

65. ஓங்குபெரும் பதங்களையும் நல்கித் தானென்
றுள்ளிருந் திட்டு டற்பிற விச்சிறையு ணின்றும்
வாங்கிமா லடிகூடி முடிக்க வல்ல
மாதவன்றன் புகழமுத மாடாது வாளா
பாங்குசிறு மனிதரொடும் பிறிது பேசும்
பாவியன் றென்னவும் பகையை மாற்றித்
தீங்கு செறி நீருலகத் தில்லை யென்று
தெளிந்ததனை யான்பெரிதுஞ் சிரித்திட் டேனே!

மாதவன்-திருமால், சிரித்திட்டேன்—இகழ்ந்து விட்டேன்
பதம்-பதவி.

66. சிரிப்பன் பிதற்றுவன் செய்த நன்றி
சிதையாத நெஞ்சமே யடியார் தீங்கை
யரிப்பானை யலர்மகள்சே ராகத் தானை
யன்னையிலும் நல்லானை யாழிச்சங்கம்
தரிப்பானை வினைப்படலம் கீறி என்னைத்
தானாகச் செய்வானை அரணிக் கொம்பிற்
பரிப்பானை பரிப்பாகாய் பார்த்தர்க் கூர்ந்த
பரனை நினைந் தவன்புகழைப் படித்தி டாயே!

அரிப்பான்-இல்லாமல் செய்வான், ஆழி-சக்கரம், சங்கம்-சங்கு, அரணி-தீக்கடைக் கோல். ஆகத்தான்–பார்பினையுடையவன், பரிப்பான்-ஆளுகின்றவன், பரிப்பாகன்—தேர்ப்பாகன், பார்த்தன்-அர்ச்சுனன், பரன்–திருமால்.

67. படியொடு பாதலங்கள் பாதம் திண்டோள்
படர்திசைகள் விசும்புதரம் தொலைவி லண்டம்
குடிமுடியால் மன்னுயிர்கள் பணிலம் கண்கள்
இருசுடர்கள் மூவுலக மெங்கும் கோலக்
கொடியுறிமே னெய்யழித்து விழுங்கக் கண்டு
கோலெடுத்தார் பரிந்திரங்க குணலம் செய்வா
னடியடையும் தூரம்பன்றி யொன்று மென்றும்
ஆரோடுமிவ் வுலகத் தடைவி லேனே

குணாலம் செய்வான்-ஜாலம் செய்வான்; கோலெடுத்தார்-யசோதை

68. அடைந்தபுரந் தரர்க்கிரங்கி யரவம் சூழ்ந்த
வணிமலையை யாயிரந் தோணீட்டி யாழி
கடைந்தமுது சுரர்க்களித்த கருணை வள்ளல்
கற்பகக்கார் நிறக்கடலை யடியேன் காதல்
மிடைந்தகவிச் செழுமாலை புனைந்தென் நெஞ்சில்
வீற்றிருந்த பரமாநின் விமல சீர்த்தி
குடைந்த கொடுஞ் சுவையமுதம் விழுங்கி வாரிக்
குளிர் பெருஞ்சீர்ச் சுவைக்கடலிற் கூடு வேனே

புரந்தரன்-இந்திரன், அணிமலை-மந்தரகிரி, ஆழி-பாற்கடல் அரவம்-வாசுகி என்ற பாம்பு, கார்நிறக்கடல்-கார்வர்ணன் திருமால், விமலன்–தூய்மையானவன். சீர்த்தி-கீர்த்தி.
கவிச்செழுமாலை—பாமாலை.

69. கூடு பொதி பதினொன்று மடக்கி யாரக்
　　கொடும்பகையு மறுத்தஞ்சு புலனும் காத்து
ஓடுவழி யோடாம லொருங்கப் பண்ணி
　　யுணர்வென்னு மாவிளக் கேற்றி யுள்ளே
தேடியயன் முதலிமையோர் வருந்தச் சென்றோர்
　　திண்களிற் றுக்கருள்புரிந் ததேனே யுன்றன்
பீடு மிகுபெரும் புகட்டேன் விரும்பும் நானிவ்
　　வீங்குலகம் வீறோடு வெறுத்திட் டேனே

**திண்களிறு**-கஜேந்திரன் எனும் யானை. புகட்டேன்-புகழாகிய **தேன்**, புகழ்+தேன்=புகட்டேன்; திகழ்+தசக்கரம்=திகடசக்கரம் என்ற கந்தபுராண வரி ஒப்பு நோக்கத்தக்கதாம்.

70. வெறுத்தவுல கென்னுமாய வரங்க மேறிப்
　　பிணிமரணம் பசிமூப்புப் பிறப்பென் னின்ற
கருத்தரிய கோலங்கள் கட்டி நெஞ்சே
　　நட்டுவனார் நடம்காட்ட தருமம் பாபம்
பெருத்தபடக் கங்கொட்ட துட்டக் கூத்து
　　பயின்றிளைக்கும் சிறியேனைப் பெரிய னாக்கி
திருத்தகுதன் அடிக்கமலம் பணித்த மாயோன்
　　சீர்க்கடல்புக் கடிநாயேன் றிளைக்கின்றேனே

**துட்டக்கூத்து**—கெட்டகூத்து, மாயோன்—திருமால், **மாயசுரங்கம்**-பொய்யான சுரங்கம், படக்கம்—வாத்தியம் கருதரிய என்பது கருத்தரிய என்று இரட்டித்தது.

71. திளைத்துபெரு விற்றம்கை நாடாச் சீதை
　　மணவாளா தென்னிலங்கைச் சிந்தித்த தென்னே
வளைத்தசிலைப் பெருங்கடலே யிராமா யென்றன்
　　வல்லரணே காகுத்தா மரங்க ளேழும்
துளைத்தருளிப் பெருவாலி வலி தீர்த்த
　　சுந்தரனே துழாயலங்கல் முடியாய் சோதீ
முளைத்த கதிர்ப் பலகோடி யிரவி யொக்கும்
　　முடியானை நினைப்பாரென் முடிமே லாரே

**பெருவில் தம்கை நாடாச்சீதை மணவாளன்**-இராமன்; சிவதனுசை **இராமன் தன் கால் கட்டை விரலினல் தூக்கினன்.**

72. மேலாரும் கீழாரும் முன்பும் பின்பும்
விலாமருங்கும் நடுவகத்தும் மிக்கு மெங்கும்
மாலாரும் கடற்கிடந்த பவழச் செவ்வாய்
மரகதம் போல் திருவுருவம் மனத்துள் வைத்து
கோலாயர் பெருமானே யடியன் றன்னை
கூத்துகவும் திருவடியைக் குலாவுவேத
நூலாக மலர்ந்தானை யென்னு ணின்ற
நுண்பொருளைக் கண்களிப்ப நோக்கி னேனே

மரகதம் போல திருவுருவம்—மரகதப் பச்சையின் நிறம்;
பச்சைமாமலை போல் மேனி என்றார் குலசேகர ஆழ்வாரும்.
கோலாயர்—காலிகள் மேய்க்கும் ஆயர்.

73. கண்களிப்ப நோக்கினிய பவழ வாயும்
காதளவும் நீண்டகன்ற கமலக் கண்ணும்
ஒண்கமலத் திருக்கையும் என்னை யாண்ட
உயர்வரைத் தோளாயிரமு முலகு காக்குந்
திங்கள்சுடர்ப் படையைந்தும் கரிய கோலத்
திருவுருவம் நினைந்த வன்சீர் தோய்ந்த செல்வப்
பண் கொள்கவிச் செழுமாலை பாடு வார்க்கு
பாரகத்து நேருளரோ பார்க்குங் காலே

பாஞ்ச ஜன்யம்-சுதர்சனம் கௌமோதகி, சார்ங்கம், நாந்தகம்
சங்கு, சக்கரம், கதை, வில் வாள்.

74. காலமுகில் திரண்டதன்ன நிறமும் செய்யக்
கனிவாயும் திருக்கண்ணும் கடி நேர்க் காஞ்சிக்
கோலமலர்க் காது முலக மெல்லாம்
குடியிருந்த மணிவயிறும் சுருண்டு நீண்ட
நீலநெடுந் திருக்குழலும் கமல மங்கை
இருந்ததிரு மணிமார்பும் நினையா நின்றேன்
ஞாலவுடற் கொடுஞ்சிறையைக் கடக்க மாட்டேன்
நாய்களிலும் கடைபட்ட நாயினேனே

கமலை மங்கை—இலக்குமி.

75. நாயிரண்டோ ரெலும்பினுக் குதறு மாபோல்
நயனில்லாப் பொய்வாழ்வை நயந்து வாளா
நோய்திரண்ட வுடல்காப்பான் பிறரைக் காயும்
முன்னைக் காண் மடநெஞ்சே நோக்காய் நோக்காய்
வாய்திரண்ட கண்மலரா லென்னை யாண்ட
மாதவனே மரகதமாம் சோதிக்குன்றின்
சாய்திரண்ட நிறத்தானே யேத்தில் உன்னை
தானாகும் நியதற்குச் சங்கி லேனே

நயன்-அழகு, நயத்தல்-விரும்புதல், சங்கு—சங்கை, ஐயம்.
வாய் திரண்ட-பெரிய; மரகத நிறத்தான்-திருமாலின் நிறம் பச்சை.

76. சங்கிடங் கொண் டடலாழி வலங்கை யேந்தி
தாமரைமேல் மடமாதும் தானு மென்னுள்
கொங்கிடங் கொள் புண்டரீகத் திருந்த கோலத்
குலவாரணத் தினையென் மணியைக் கோலத்
தெங்கிடங்கொள் நெடுஞ்சோலைக் குடந்தை
திருவரங்க மென்றிவற்று ளரவிற் பள்ளி
யங்கிடங்கொண் ணெடுஞ்சுடரே யென்னை யாண்ட
யருட்கடலைக் கவிக்கடலா லணைக்கின் றேனே

கவிக்கடல்-பாடல்கள், அடலாழி-போர்ச்சக்கரம், சுதர்சனம்,
தாமரை மேல் படமாது-இலக்குமி, கொங்கு-தேன்;
புண்டரீகம்-தாமரை, கோலம்-அழகு, குலவாரணம்—குலயானை,
தெங்கிடங்கொள்-தென்னைகள் வளரும், குடந்தை-கும்பகோணம்
இராமகுடமெனும் தண் குடந்தையுமாம்.

77. அணியாழி கதைதனு வாள்பணில மென்னும்
ஐம்படையும் ஆயிரம்பொன் மலைகள் போலும்
மணியாரும் திண்தோளும் பவழ வாயும்
மரகதம் போல் திருவுருவும் மனதுள் வைத்து
தணியாத பெருங்காதல் மூழ்க மூழ்க
தருக்கியவன் தாளிணைக்கீழ் புகுவேன் மற்றிப்
பிணியாரும் பெருநிலத்து மனித ரோடும்
பிறிதொருபேச் சொரு பொருளாய்ப் பேசு வேனே

ஆழி—சக்கரம், கதை—கௌமோதகி, தனு-சார்ங்கம்,
வாள்—நாந்தகம், பணிலம்-பாஞ்ச ஜன்யமெனும் சங்கு,
மரகதம்-பச்சைக்கல்.

78. பேசுவேனே பிறிதொரு பேச்சென்னை யாண்ட
பெருமானே ஆனாயர் பிள்ளாய் வள்ளால்
கேசவனே யெம்மானே யுலகம் காக்கும்
குறள் மாணீ நறுமலராள் கமலை யர்க்கும்
நாயகனே திருநந்தன் மனையாள் நங்கை
யசோதை யிளம் களிறேயென்நம்பியும்பர்
வாசவனே திசைமுகனே சிவனே யென்னும்
வானவர்கள் தொழப்புகுமென் மனத்து ளானே.

ஆனாயர்-ஆக்களை மேய்ப்பவர், ஆயர்-கேசவன், கேசி என்னும் அரக்கனை அழித்தவன், திசைமுகன்-பிரம்மன், வாசவன்-இந்திரன் யசோதையிளம் சிங்கம் என்று ஆண்டாள் கூறுவது காண்க.

79. மனனுக்குங் செவிமூக்கு கண்டோ ளென்னும்
வன்பகைக ளாறினையு முடக்கி யன்பால்
எனையாக்கி யானுனைவந் தடைய மாட்டேன்
எம்பெருமா னடிநாயே னிலங்கை போகஞ்
சினமாக்கும் வல்லரக்க ரசனைக் கட்டே
எரிசரத்தால் விரிபகுவாய் செந்தீ தின்னக்
கனமாகும் சிலைகுனித்த கனியே யன்பால்
கருணைபுரிந் தருளுவதுன் கடன்கண் டாயே.

மனம், நாக்கு, செவி, மூக்கு, கண், தோள் (மெய்) என்று ஆறு கட்டல்-அழித்தல், பகுவாய-பிளந்தவாய், கனம்—பெருமை.

80. கண்டேனென் கண்குளிர்ப்பக் கமல மங்கை
கதிர்மு லைகள் பொரப் பெருத்த கனகத்
திண்டோள்
உண்டேனை உலகனைத்தும் வயிற்றுள் கொண்ட
ஒரு தேனைப் பொருதேரை விசயற் கூர்ந்த
வண்டேனை மறைமரத்தின் பொதும்பில் வாழும்
மார்த்தேனை யாய்ச்சியர்க்காய் மஞை
வேறிட்ட
திண்டேனை திருவரங்கத் தரவிற் பள்ளி
தரித்தானை திடுமரத்தூர் மறுகு சென்றே.

கனகதிண்டோள்-திண்தோளையுடைய திருமால்,
விசயன்-அர்ச்சுனன், மறைமரம்-வேதமாகிய மரம்.

பொதும்பு கிளை. கேரளத்தில் கண்ணனூர் மாவட்டத்தில் எரமம் என்ற ஊர் உள்ளது. இங்கு அழிந்து போன திருமால் கோயில் உள்ளது. இராமகுடம் எனும் குடந்தை இன்று இராமன்தளி, எரமம் என்று வழங்குகிறது.

81. சென்று நெடுங் காலங்க ளெல்லாம் பொல்லாத்
தீவினையின் சிறைக்கிடந்து சிறியே னந்தோ
இன்றளவுன் திருப்பாத மணுகா விட்டா
லெங்கண்றான் தரிக்கிற்பர் இமையோன் பேரூர்
துன்றுநெடு மணி நெடுந்தேர் மன்னர் சூழ
சூதணவு துடியிடையாள் முன்றில் நட்ட
வென்றி விறற் படையாழி யுவண வாழி
வித்தகனை யடியவர்க்கு விளம்பிக் காணே

மணிநெடுந்தேர் மன்னர்-கௌரவர்கள் இமையோர் பேரூர்-இந்திர
பிரஸ்தம். துடியிடையாள்-திரௌபதை, பாஞ்சாலி.
முன்றில-அரசசபை. உவணம்-கருடன்.
உவண ஆழிவித்தகன்-கண்ணன்.

82. விள்ம்புபெரு நால்வேதப் பயனே! வானோர்
மெய்துணையே! விடையேழும் பொருத்தோ
ராய்ச்சி
வளைபுணரும் தோள்புணர்ந்த மைந்தா நந்தன்
மாமணியே கோகுல வாரணத்து வாய்த்த
களம் புணருந் திருநெடுந்தேர் விசயற் கூர்ந்த
கற்பகமே கதிர்ப் பிழம்பா யடியேன் காதற்
உளம்புணரும் சுவைக்கடலே யென்றும் நானென்
னுள்ளுயிரைத் திருமாலை யோர்கின் றேனே.

ஆய்ச்சி—உருப்பிணி (உருக்குமணி) நந்தன்மாமணி-நந்தகோபனின்
மகன். கோகுல வாரணம்-ஆயர்பாடியின் களிறு.

83. ஓர்ந்துணரும் சனகாதி முனிவ ருள்ளத்
தொருவேள்வி யருமறையின் பயனே வானோர்
ஆர்ந்தசுட ரானந்த வெள்ள மூர்த்தி
ஆண்டளந்த பெருவள்ளால் அறிவால் ஏறி
கூர்ந்தமுகில் கொடு மழைக்குக் குன்ற மேந்தி
கோநிரையின் துயர்தீர்த்த கோவே என்னைச்
சேர்ந்துயிர் காத்தருள்வந் தென்சிறுமை பாராத்
திருவாளா யென்செய்கேன் சென்னி யானே!

குன்றம்—கோவர்த்தனம் எனும் குன்று, கோநிரை-பசுக்கூட்டம்
கோ (வடசொல்)-பசு.

84. சென்னிமுகிற் பரசிகரத் தருவிச் சாரல்
திகழ்திருமா லிருஞ்சோலை யென்னுஞ் செல்வப்
பொன்னியலும் கொப்பூழில் புவன மேழும்
பொங்குலகும் புகழ் மறையும் தந்த வுந்தித்
துன்னிதழின் மலர்க்கொப்பூ முரசே யென்னுள்
சோதியரும் பிழம்பாய்த் தோன்றி யென்றும்
மன்னுபெருந் தோளி மங்கை மணாளா வென்னும்
வாசகத்தால் மொழி குழறி பாடு வேனே!

திருமாலிருஞ்சோலை-அழகர் கோயில் (மதுரைக்கு அருகே யுள்ளது). மலர்க்கொப்பூழ்-பதுமநாபன், பற்பநாபன். மங்கை மணாளன்-இலக்குமீ காந்தன்.

85. வாடாத புகழ்ச் சனகன் வளர்த்த கோல
மயிலுறையும் மணிமார்பா நயவாத வாளரக்கர்
நாடாதவென் னமுதமே ஞால மீன்ற
நற்பயனே குகனுறவு நயந்து கொண்ட
கோடாதபெரு வள்ளால் எறிவா னேறிக்
கோநிரையின் துயர்தீர்த்த கோவே முன்னைப்
பீடாருங்கடல் வறக்கவெ குண்டு வேற்கைப்
பிடித்தநின் னடியின்று பிடிக்கின் றேனே!

சனகன்வளர்த்த கோலமயில்-சானகி, சீதை, கோடாத-வளையாத, கோநிரை-ஆநிரை, கோவே-அரசனே.

86. பிடியொடுமால் கரியுலவு மருவிச் சாரல்
பெருமுழையி லரிமுழங்கப் பிறங்கா நின்ற
வெடிகட லாழிகளு மெரியச் செல்லும்
வேங்கடமா மலைச்சிலம்பன் மேன்மை நோக்கி
படியுடைய மாதவர்க ணெஞ்சிற் றோன்றும்
மணிச்சுடரே யடிநாயேன் மனத்தை யாண்ட
வடிவுடைய பெரியவர்கட் கறிய வொண்ணா
வற்புதனே யென்றடியே னழைக்கின் றேனே.

பிடி-பெண்யானை, மால்கரி-பெருமையுடைய ஆண்யானை முழை-குகை, அரி-சிங்கம், வேங்கடமாமலை—திருவேங்க (களிறு) மலை—திருப்பதி. மலைச்சிலம்பன்-வேங்கடவன், வேங்கடாசலபதி. பெரியவர்—ஞானிகள், முனிவர்.

87. அழைத்தமுது அழுத்தழிய கொங்கை யுண்ட
வற்புதனே யாயரிளம் கன்னி மார்கள்
தழைத்தசிறு தொழிலழிக்குந் நம்பீ யென்னை
யாண்டாயீண் டுலகமெல்லா முய்ய வேனும்
மழைத்தண் முகிற் றிருநிறத்தா யென்ன மற்றிப்
பிறவிச் சிறைகடக்க வாங்கிக் கொண்ட
தழைத்தசுடர் படையாலின் றென்னை யாண்ட
தத்துவனே என்றலைக்கண் டங்கி டாயே.

தொழுத்தை—பூதனை, கன்னிமார்கள்-ஆயர் பெண்கள், அழுத்தை—பூதனே, தழைத்த சிறுதொழில்-சிறுவீடு கட்டி விளையாடும் விளையாட்டு, தத்துவன்—திருமால், நம்பீ—கண்ணனே, பிறவிச்சிறை—பிறவியாகிய கடல் சிறை-நீர்நிலை, ஏரி, கடல.

88. தங்கு மலர்த்திசை முகஞ்சிவன் முதலாய் மற்றித்
தடஞ்சுரரு முனிவருமற் றிடங்கர் தாமும்
பொங்குலகிற் பிறந்திறந்து சுழலா நின்ற
பொய்த்துழலு சராசரங் ளெல்லாம் பூமேல்
ஆங்குலவு மருப றையுந் தந்த வுந்தி
அம்மானே யடிநாயேன் அடைத லாலே
தீங்குறையு முடம்பிட்ட முத்தாய்ச் செல்வத்
தினிப்பெருவீ டெய்துவ தின்பம் தானே.

இடங்கர்—தூர்த்தர் (சூ. நிகண்டு) டகரவெதுகை. திசைமுகன்—பிரம்மன், சுரர்-தேவர், சராசரங்கள்-நிலைபெற்றனவும், நிலைபெறாதனவுமாகிய உலகங்கள், பூ-பூமி. உந்தி அம்மான்-பதுமநாபன், திருமால்.

89. இன்பமரும் திருமடந்தை விடனே! யென்னை
யுடையானே! எழிலரங்கந் நிறைய வேறி
வன்புடைய மணியரவிற் பள்ளி கொள்ளு
மாயுவுடற் கொடுஞ்சிறையை மாற்றிக்
கொண்டு
பொன்பயிலும் மணிமாட பூழியர் கோன் றன்வாய்
புகழ்திருமா லிருஞ்சோலை பொருந்தச் சென்னி
அன்பமரும் நெறிதடவிப் பரவ வல்லார்
ஆதிமுதற் பரஞ்சுடரோ டாளு வாரே!

விடன்-காதலன், கணவன், திருமடந்தைவிடன்-இலக்குமி-கணவன். மணியரவு—ஆதிசேடன். பூழியர்கோன்—பூழிநாட்டுக்கு அதிபன்.



திருமதி சித்ரா கேசவன் (1963) பாலக்காடு பண்டிட் மோதிலால் அரசு உயர்நிலைப் பள்ளியில் பணியாற்றுகிறார். கள்ளிக்கோட்டை பல்கலைக்கழகத்தில் முதுகலை பட்டம் பெற்றவர். அதே பல்கலைக்கழகத்தில் பி. எட். பட்டத்தையும் பெற்றவர்

இந்நூல் அவரது கன்னி முயற்சி. இன்னும் பல நூல் இவரது முயற்சியில் வெளிவரட்டும்! வைணவ பக்தி இலக்கியக் கருவூலத்துக்கு திருச்சம்பரத் தந்தாதியெனும் இந்நூல் இன்னுமொரு மணியாகத் திகழ்கிறது. பெருமாள் திருமொழி, முகுந்த மாலை என்ற வரிசையில் இந்நூல் மூன்றாவதாகத் திகழ்கிறது. கி. பி. பன்னிரண்டு-பதின்மூன்றாம் நூற்றாண்டுகளிலும் தமிழ்மொழி சேரநாட்டில் சிறப்பாக மலபார்ப் பகுதியில் வழக்கிலிருந்தது என்பதற்கான சான்று இந்நூல். இது போன்ற இன்னும் எத்தனை தமிழ் நூற்கள் இங்கு மறைந்து கிடக்கின்றனவோ!

இந்த இருபதாம் நூற்றாண்டின் இறுதியிலும் கூட சேரநாட்டிலிருந்து ஒரு தமிழ் நூல் கிடைத்திருக்கிறது என்றால் அதனைத் தமிழுலகம் இருகை நீட்டிப் பெற்றுக்கொண்டு ஆதரவு தரவேண்டும்.

பதிப்பகத்தார்